உ



# ஸுப்ரஹ்மண்ய ஸஹஸ்ரநாமம்

( மூலம் – உரை – பூஜாகல்பம் )


திருவெண்காடு

அபிநவ வியாஸ, வரகவி வேதாந்த வித்வான்

தைவக்ஞ பூஷணம்

பண்டிட் T. K. ராமச்சந்திர சாஸ்திரிகளால்


எளிய தமிழ் நடையில் இயற்றப்பட்டது

ஸ்ரீ ராம ஜயம்


கிரி பிரஸ்

பப்ளிஷர்ஸ்

திருவல்லிக்கேணி :: சென்னை–5



காஞ்சி காமகோடி பீடாதிபதி
ஜகத்குரு ஸ்ரீ சங்கராசார்யாள்

உ

ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி

# ஜகத்குரு ஸ்ரீ சங்கராசார்யஸ்வாமிகள் ஸ்ரீமடம்

காஞ்சீபுரம்

---

முகாம்........................................ தேதி........................................

ஸர்வமங்களேயான அம்பாளுக்கும் ஸர்வேச்வரரான சிவபிரானுக்கும் திருக்குமாரராக ஆவிர்பவித்து தன்னை ஸ்மரிப்பவர்களுக்கு ஸர்வமங்களங்களேயும் அருளும் ஸ்ரீ ஸுப்ரமண்யஸ்வாமியை ஸ்துதிக்கும் பக்தர்களுக்கு பரமோபகாரமாக ஸ்காந்த புராணத்தில் ப்ரம்மநாரத ஸம்வாத ரூபமாக விளங்கும் ஸ்ரீ ஸுப்ரஹ்மண்ய ஸஹஸ்ரநாமத்தை பொருளுணர்ந்து பாராயணம் செய்வதற்காக பண்டிதர் ஸ்ரீ ராமசந்திர சாஸ்திரிகளால் தெளிவாய் விசேஷ விவரணங்களுடன் இயற்றப்பட்ட தமிழ் உரையுடனும், பூஜாகல்பத்துடனும் திருவல்லிக்கேணி ஸ்ரீ கிரி அச்சுக்கூடத்தின் அதிபரும் அனேக பக்தி நூல்களேயும் வெளியிட்டு ஆஸ்திக்யத்தை ப்ரசாரம் செய்துவருபவருமான ஸ்ரீ கைலாஸமய்யர் வெளியிட முன் வந்திருப்பதை அறிந்து ஸந்தோஷிக்கிரோம்.

ஆஸ்திகர்கள் சிறந்த இந்நூலின் துணைகொண்டு திருக்குமரரை பொருளறிவுடன் துதித்து ஸகலவிதமான மேன்மைகளேயும் அடைவார்களாக.

யாத்ராஸ்தானம்,
இளேயாத்தகுடி
12—6—1962

நாராயணஸ்ம்ருதி

சுபக்ருத் ஜ்யேஷ்ட சுத்ததசமி



# முன்னுரை

ஆறுமுகமுண்டு பன்னிருதோளும் உண்டு அய்யன் கையில்
ஏறியவேலுண்டு வெற்றிமயூரமுண்டு ஏவல்செய்ய
மீறிய சிங்கத்துரை வீர வாகுண்டு வேளைக்கிங்கே
கூறிய போது வருவான் குமரகுருபரனே

கலியுக வரதனும் கண்கண்ட தெய்வமுமான திரு முருகனுடைய திவ்ய சரிதத்தை மிக விரிவாக எடுத்துக் கூறும் நூல் வட மொழியிலுள்ள பதினெட்டு புராணங் களிலே ஒன்றான ஸ்காந்த புராணமாகும். "கந்த புராணத் திலுள்ளது எந்த புராணத்திலுமில்லை" என்றவாறு பல விசித்ரமான சரித்ரங்களை ரஸமாக வெளியிடும் பெருமை ஸ்கந்தபுராணத்திற்கு உரியதாகும். கலி முடிந்தாலும் ஸ்காந்தம் முடியாது என்று அதன் நீண்ட கதைத் தொடரைப் பற்றிப்பெரியோர் கூறுவர். ஆயினும் தனியாக முருகனின் சரித்திரத்தை மட்டும் விரிவாகக் கூறும் நூல் **சங்கரஸம்ஹிதை** என்ற ஸ்காந்த புராணத்தின் ஒரு பகுதியாகும். இந்த சங்கரஸம்ஹிதை யைத்தழுவி ஸ்ரீகச்சியப்பசிவாசாரியார் முதலிய அருட் கவிகள் முருகனின் சரிதத்தைத் தமிழிலே காவியமா[ய்] இயற்றி இருக்கின்றனர். நக்கீரர் அருணகிரியார்போன்[ற] மகான்கள் அருளிய க்ருதிகள் நிறையப் பெற்றிருப்பதும் நாம்செய்த பாக்யமே,

முருகனைப் பற்றியே முக்கியமாகப் பேசும் நூல்களைத் தவிர மற்ற வடமொழிப் புராணங்களும் வடமொழிக் காவியங்களும் தமிழிலுள்ள பல்வேறு இலக்கிய நூல்களும் சந்தர்ப்பம் கிடைத்தபோதெல்லாம் அழகு, அறிவு, வீரம், இதன் உறைவிடமான முருகனின் பெருமையை ஆங்காங்கே பொருத்தமாகக் கூறியிருப்பதை ஆராய்ந்தால் முப்பத்து முக்கோடி தெய்வங்களிலே முருகன் ஒரு தனிப்பெருமை பெற்றிருப்பது விளங்கும். இது காரணம் பற்றித்தான் "புலவர் எவரும் புகும்பதியே" என்று ஸ்ரீ ராமலிங்கஸ்வாமிகள் அருளினார்போலும். ஸ்கந்தபக்தரான ஸ்ரீ யக்ஞ சுப்ரமண்ய தீக்ஷிதர் என்ற பெரியாரும் வள்ளீபரிணய சம்பு என்ற நூலில்

**त्वत्पादपद्म युगलीव वचः पुराणं**
**त्वत्‌दिव्य मंगलकथेव कविप्रबन्धम्‌ ।**
**त्वद्भक्त पंक्तिरिव साधुसभान्तरालं**
**वल्लीवपुः तरूणताद्य परिष्करोति ॥**

இவ்வாறு முருகனின் மங்கள கதையைச் சேர்த்தால்தான் காவியம் அழகு பெருகிறது என்று கூறியிருக்கிறார்.

"வந்த வினையும் வருகின்ற வல்வினையும்
கந்தனென்று சொல்லக் கலங்குமே"

என்ற நவீன கவியின் வாக்குப்படி கந்தநாமாவைச் சொல்லுவது வினையறுக்க வழிவகுக்குமல்லவா; ஆகவே இதை நிரூபிப்பது போல ஆதர்ச கவிகளும் அருட்கவிகளுமான ஸ்ரீ வால்மீகி, வியாசர், காளிதாசன், [illegible]வி சக்ரவர்த்தி, கம்பர், வில்லிபுத்தூர் ஆழ்வார் முதலிய மகான்கள் தன் க்ருதிகளுக்குத் தனியாகக் கதாநாயகனைத் தேர்ந்தெடுத்துக்கொண்டிருந்த போதிலும்கூட அதில் வரும் கதாநாயகர்களுக்கும் வீரர்களுக்கும்

முருகனை எடுத்துக் காட்டாக அடிக்கடி கூறுவது அவர்கள் முருகன்மீது கொண்டிருக்கும் பக்தியையும் பேராதரவையும் காட்டுகிறது.

இங்கு வால்மீகியின் ராமாயணத்திலிருந்து சில பகுதிகளைக் காணலாம். யக்ஞஸம்ரக்ஷணத்திற்காக விசுவாமித்ரர் ஸ்ரீ ராமரையும் லக்ஷ்மணரையும் அழைத்துச் செல்லுகிறார். முன்னே முனிவர் செல்லப் பின் இருவரும் செல்லுகின்றனர். இதற்கு ஒரு எடுத்துக் காட்டை வால்மீகி கூறுகிறார்.

"स्थाणुं देवमिवाऽचिन्त्यं कुमाराविव पावकी"

பரமசிவனை இருமுருகர்கள் தொடருவதுபோல் என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. திருமுருகன் சரவணப் பொய்கையில் உதித்தபின், சிவன், பார்வதி, அக்னி, கங்கை, இந்நால்வரும் குழந்தையின் ஸாமர்த்யத்தைக் காண விரும்பி ஒரே சமயத்தில் அழைத்தனர். அறிவின் உறைவிடமான முருகன் எல்லோருக்கும் சமமான மரியாதை செய்ய விரும்பி ஸ்கந்தன், விசாகன், சாகன், நைகமேயன் என்ற நான்கு திவ்ய வடிவம் கொண்டு முறையே சிவன், பார்வதி, அக்னி, கங்கையாகிய இந்நால்வர்களையும் அடைந்தான் என்று பாரதத்தில் கூறப்பட்டிருக்கிறது. இத்தொன்மையான கதையை வால்மீகி முனிவர் மனதில் எண்ணி அழகு, அறிவு, வீரம், செல்வம் இந்நான்குக்கும் உறைவிடமான ராமலக்ஷ்மணர்களுக்கு இரண்டு முருகர்களை உவமை யாக்குகிறார்: இதிலிருந்தே பரதன் சத்ருக்னன் இவ்விருவர்களும் முருகன் போன்றவர்களே எனக் கூறாமல் நயம்படக் காட்டியிருப்பதும் ஒரு ருசிகரமான அம்சமாகும்.

இதுபோல யுத்த காண்டத்தில் ப்ரம்மாஸ்த்ர ப்ரயோகத்தினால் கட்டுண்டு வீழ்ந்து கிடக்கும் ராம

லக்ஷ்மணர்களை ; ராவணனது தூண்டுதலால் புஷ்பக விமானம் ஏறி யுத்தகளம் சென்று சீதை பார்க்கிறாள். இங்கே மீண்டும்

**शयानौ पुंडरीकाक्षौ कुमारा वि वपावकी ।**
**शरतल्पगतौ वीरौ तथा भूतौ नरर्षभौ ।**

இரு முருகர்கள் போல் ப்ரகாசிக்கின்றனர் ராமலக்ஷ்மணர்கள் என்கிறார் வால்மீகி. இதற்கு காரணமும் காட்டுகிறார்.

முருகன் பிறந்தபொழுது நாணல் படுக்கையில் கிடந்தான், **शर** = நாணல் (**शर** = பாணம்) இங்கு பாணப்படுக்கையில் ராமரும் இலக்ஷ்மணரும் கிடக்கின்றனர். **शरतल्पगतौ** என்ற வால்மீகியின் பதப்ரயோகம் மிக ரஞ்சகமாய் அமைந்திருக்கிறது. இங்கு அருணகிரியாரின், "பெம்மான் முருகன் பிறவான் இறவான்" என்ற வாக்கையும் சேர்த்துப் பார்த்தால் தெரியும். ராமலக்ஷ்மணர்கள் நாசமடைய மாட்டார்கள் என்பதை "**कुमाराविव**" என்ற உவமையின் மூலம் எடுத்துக் காட்டுகிறார். இதுபோலவே வ்யாசரும் பலராமனையும் க்ருஷ்ணனையும் வர்ணிக்குமிடத்து

**कवचित्भस्मप्रदीप्तांगौ करीषप्रोक्षितौ क्वचित्**
**तावुमौ पर्यधावेतां कुमाराविव पावकी ॥**

என்று முருகனையே உபமானமாகக் கூறுகிறார்.

யஞ்ஞ ஸம்ரக்ஷணத்திற்காக விசுவாமித்ரர் ராமலக்ஷ்மணர்களை அழைத்துச் செல்லும்போது, வால்மீகி குமார ஸம்பவக் கதையையே ரஸமாகக் கூறியிருக்கிறார். கடைசியில்

कुमारसंभवश्चैष: धन्य: पुण्य: तथैवच
भक्तश्च य: कार्तिकेये काकुत्स्थ भुवि मानव:
आयुष्मान्पुत्रपौत्रैश्च स्कन्दसालोकयतां व्रजेत्

என்று கார்த்திகேயனிடம் பக்திகொண்டவன் சிரஞ்ஜீவி யாய் பிள்ளை பேரன்களுடன் வாழ்ந்து முடிவில் ஸ்கந்த லோகம் செல்லுகிருன் என்று பலன் கூறியிருப்பதும் வால்மீகி முனிவருக்கு முருகன்மீது பெரும் பற்று இருப்பதை நாம் எளிதில் அறிய ஏதுவாகும்.

ராமாயணத்தில் "रामायणमहामालारत्नं" ராமாயண மாகிய பெரும்மாலைக்கு ரத்னம் போன்றவர்" என்று புகழப்படுகின்ற ஆஞ்சனேயருக்கும் முருகனையே உவமையாக்கி யிருப்பதும் ரசிகர்களின் மனதைக் கவரும் என்பதில் சிறிதும் ஐயமில்லை. வாயு தேவனுக்கு அஞ்சனை என்ற தேவமாதினிடம் புதல்வனுகத் தோன்றுகிருன் ஆஞ்சனேயன் குழந்தை வடிவமாக. குழந்தையின் பசி கண்டு ஆகாரம் தேடப் புறப்படு கிருள் அஞ்சனு தேவி. தாயில்லாத சமயம் பசியால் வருந்திக் கதறுகிருர் ஹனுமான். இங்கே வால்மீகி சரவணப் பொய்கையிலே உதித்த முருகன் சமீபத்தில் தாய் இல்லாமல் இருக்கிருர். அவருக்கும் பால் கொடுப் பதற்கு அன்னை இல்லாமையால் பசி வருகிறது. கதறு கிருர். அங்கு முருகன் கதறுவதுபோலிருந்தது இங்கு ஹனுமான் கதறியது என்று வர்ணித்திருக்கிருர்.

एषमातुर्वियोगाच्च क्षुधयाच भृशार्दित: ।
रुरोद शिशु: अत्यर्थं शिशु: शरवणे यथा ॥

இங்கு ரஸிகர்களின் சிந்தைக்கு நிறைய விருந் அளித்திருக்கிருர் வால்மீகி. இதிலிருந்து வீரர்களின ஸமுதாயத்திற்கே முருகனை உவமையாக்குவது வால்மீகியின் எண்ணம் என்பது திண்ணம். இது

போன்ற இடங்கள் ராமாயணத்தில் நிறைய மலிந்து பொலிந்துகிடக்கின்றன. விரிவுகண்டஞ்சியே இங்கு சில கூறப்பட்டன.

இங்கு ராமாயணத்தில் ஆஞ்சனேயரைப் போலவே பாரதத்தில் வீரத்திலும் ப்ரம்மசரியத்திலும் புகழ் பெற்றவர் பீஷ்மபிதாமகர். 18 நாட்கள் நடந்த மகா பாரத யுத்தத்தில் அந்த பீஷ்மர் ஒருவரே பத்து நாட்கள் சண்டையிட்டுக் கண்ணனையும் ஆழியெடுக்கத் தூண்டி புகழ்பெற்று வீரப் படுக்கையில் வீழ்ந்தார். த்ரோணர், கர்ணன், சல்யன், முதலியவர்களுக்கு அந்தப் பேறு கிடைக்கவில்லை. அதன் காரணத்தையும் வ்யாஸ பாரதத்திலே காணலாம்.

**नमस्कृत्य कुमाराय सेनान्ये शक्तिपाणये ।**
**अहं सेनापतिस्तेद्य भविष्यामि नसं शयः ॥**

துர்யோதனன் பீஷ்மருக்கு சேனபதி பட்டம் கட்ட முடிவு செய்கிறான். அவரும் இணங்குகிறார். பட்டா பிஷேகத்திற்கு எல்லாம் தயாராய் இருக்கின்றன.

அப்பொழுதுபீஷ்மர்; சக்திபாணியும் சேனதிபதியு மான முருகனுக்கு நமஸ்காரம் செய்துவிட்டுப் பின்பு சேனதிபதிப் பொறுப்பை ஏற்றுக்கொள்ளுகிறேன் என்று கூறுகிறார். கீதாசார்ய பரம புருஷனாகிய கண்ணன் அர்ஜுனனுக்குக் கீதையில் **"सेनानीनां अहं स्कन्दः"** சேனபதிகளுக்குள் நான் முருகனாயிருக் கிறேன் என்றல்லவா கூறியிருக்கிறார். சேனபதியான தெய்வத்தை வணங்காமல் சேனபதி பட்டாபிஷேகம் செய்து கொண்டால் வெற்றி கிட்டுமா. அதோடு இரு

வரும் கங்காபுத்ரர்களாயிற்றே. பீஷ்மருக்கு மூத்தவன் அல்லவா முருகன். இங்கு வ்யாசர் முருகனுடைய வீர வரலாற்றை ஞாபகப்படுத்துவதற்குக் கையாண்ட முறை முருக பக்தர்களுக்குப்பெருமகிழ்ச்சி தரும். இது மட்டுமல்ல வியாசர் வீரர்களின் வரிசைக்கே முருகனை எடுத்துக் காட்டாக வர்ணிப்பதைப் பல இடங்களில் காணலாம்.

கடோத்கசன் கர்ணனது சக்தியினால் அடிபட்டு விழுந்து விடுகிறான். அப்பொழுது பாண்டவர்களும் அவர்களைச் சார்ந்தவர்களும் மிக மிக துக்கப்படுகின்றனர்; ஆனால் பார்த்தனது ரதத்தில் வீற்றிருக்கும் கண்ணனோ பெருமகிழ்ச்சியோடு காட்சியளித்தார். இதைக்கண்டு பீமனும் அர்ஜுனனும் ஆத்திரம்கொண்டனர். அப்பொழுது அவர்களது கோபத்தைத் தணிக்க கண்ணன் எடுத்துக் கூறும் அழகைக் கவனியுங்கள்; கடோத்கசன் மீதுசக்தியை ஏவச்செய்து அதை வீணாக்கி விட்டேன். இல்லையானால் கர்ணனது அந்த சக்திக்கு அர்ஜுனன் பலியாகி யிருப்பான்.

शक्तिहस्तं पुनः कर्णं कोलोकेऽस्तिपुमानिह ।
य एनमभितस्तिष्ठेत् कार्तिकेयमिवाहवे ॥

சக்தியோடு (வேல்) விளங்கும் முருகனைப்போன்று நிற்கும் கர்ணனை இங்கு யார் எதிர்த்து நிற்க முடியும். (இங்கு கர்ணனும் இந்திரனிடம் பெற்ற சக்தியோடு நிற்கிறான், இந்த சக்தி இனி இந்திரனிடம்சென்றுவிடும். ஆனால் முருகனிடம் அமைந்த சக்தி நிரந்தரமானது) இவ்விடத்தில் உபமானத்தின் சிறப்பு எவ்வளவு அழகாக வர்ணிக்கப்பட்டிருப்பது மிகவும் போற்றத் தக்கது. இதிலிருந்து பெரிய வில்லாளியும் சூரிய புத்திரனுமான கர்ணனுக்கும் முருகனே உவமையாக் கப்பட்டிருக்கிறார், என்பதைக் காண்கிறோம். இது போன்று வில்லி பாரதத்தில் "கந்தனிற் சிறந்த நின்

கனிஷ்டன்'' என்பது போன்ற பல பகுதிகளை பல விடங்களில் காணலாம்.

கம்பராமாயணத்திலும் "மயிலூர் கந்தனை யனைய வர் கலைதெறிகழகம்'' என்று அயோத்தியில் உள்ள இளைஞர்கள் யாவருக்குமே முருகனை உவமையாக்கு கிருர். ஓரிடத்தில் கம்பர் "மானவக்குமரர்'' என்றே சொல்லுகிருர்;

"ஆயது இவ்விடம் அவிர்மதி யணிந்த
தூயவன் தனக்கு அரிவையில் தோன்றியதொல்லை;
வாயுவும் புனல் கங்கையும் பொறுக்கலாவலத்த
சேய்வளர்ந்தருள் சரவணமென்பதும் தெரித்தான்''

இதில் வேதங்களின் கருத்தையும் கச்சியப்பர், வ்யாசர், வால்மீகி, முதலியவர்களால் பல்லாயிரக்கணக் கான செய்யுள்களிஞல் வர்ணிக்கப்பட்ட அரும்பெரும் விஷயத்தை ஒரு செய்யுளிஞல் முருகன் பெருமையை இங்கு விசுவாமித்ர முகமாகவே எடுத்துக் கூறியிருப் பது கம்பருக்கு முருகனிடம் உள்ள பேரன்பைக் காட்டு கிறது. வாசகர்களுக்கு இது ஒரு பக்தி ததும்பும் அன்பின் இன்சுவை விருந்து என்றே சொல்லலாம்.

இவ்விதமே காளிதாசர் தன் ரகுவம்சம், விக்ர மோர்வசீயம் முதலிய க்ரந்தங்களிலும் விசேஷமாக முருகனை உவமையாக்கி கூறியிருப்பதும் விசேஷமாக மக்களுக்கு முருகனிடம் பக்திகொள்ள ஹேதுவாகும்.

இப்படியாகக் கலியுகத்திலும் எல்லா மக்களும் "என் தெய்வம் என் தெய்வம்'' என்று கொண்டாடும் படி மக்களின் மனதில் குடிகொண்ட முருகன்; திருச் செந்தூர், திருப்பரங்குன்றம், பழனி, பழமுதிர் சோலை, ஸ்வாமி மலை, திருத்தணி முதலிய குன்றுகள் தோறும் தோற்றம் கொடுத்து நம்மை வாழ்விக்கின்ருன். முக்ய மாக மலைகள்மீது முருகன் வாசம் செய்கிருன் என்பது

முருகன் வேதங்களால் உணர்த்தப்படும் தெய்வம் என்பதைக் குறிக்கிறது. கிரி (மலை) என்றால் வேதஸ்வரூபம். அதன்மீது வாழும் தெய்வம் வேதவேத்யமான தெய்வம் என்றே பொருள் கொள்ள வேண்டும். இதற்கு **तत्र त्रीन् गिरिरूपान्** என்று துவக்கி **वेदाएव एता:** என்று கூறப்பட்ட வேத வாக்கியமே சான்றாகும். இதை ஸ்ரீ சதருத்ரீய மகா மந்திரத்தில் **गिरिश** என்ற பதத்திற்குரிய பாஷ்யத்தில் காணலாம்.

ஆகவே இப்படிப் பல மகான்கள் முருகனுடைய பெருமையை பலவிதங்களிலே கூறியுள்ளார்கள். அந்த முருகனுடைய பெருமையைத்தான், தொன்மையான இந்த ஸுப்ரமண்ய ஸஹஸ்ரநாமமும் தன்னுள்ளே அடக்கி நிற்கின்றது. ஸ்ரீ பார்வதீ தேவிக்கு சிவபெருமானே முருகனது மகிமையை எடுத்துக் கூறியுள்ளார் என்றால் நாம் எப்படிக் கூறுவது என்று நைமிசாரண்ய வாசிகளான சௌனகாதி முனிவர்களுக்கு சூத புராணிகர் இவ்வாறு கூறுகிறார்.

தன்னிஷ்டத்தைப் பூர்த்தி செய்யக்கூடியதும், புண்யத்தைக் கொடுப்பதும் துக்கம், தாரித்ரியம் இவைகளை நாசம் செய்து இன்பத்தையும் செல்வத்தையும் கொடுக்க வல்லதும் எல்லா வ்யாதிகளையும் போக்கி ஆரோக்யத்தை அளிக்கவல்லதுமான உபாயத்தை நீங்கள் வேண்டினீர்கள். ஸுலபமான அவ்வுபாயம் ஸ்ரீ ஸுப்ரஹ்மண்ய ஸஹஸ்ரநாமமே யாகும்.

**आयुर्वृध्धकरं पुसांस्थैर्यं वीर्यं विवर्धनं ।**
**वाक्येनैकेन वक्ष्यामि वांछितार्थं प्रयच्छति ॥**
**तस्मात्सर्वात्मना ब्रम्हन् नियमेन जपेत्सुधी: ॥**

மனிதர்களுக்கு ஆயுளை அளித்து தூய இன்ப வாழ்க்கையைக் கொடுத்து ஸர்வாபீஷ்டத்தையும் அருளவல்லது ஸுப்ரமண்ய ஸஹஸ்ரநாமமே. ஆகவே இதை நியமத்துடன் ஜபம் செய்து பரம ச்ரேயஸ்ஸை அடையுங்கள் என்று ஸுதர் முனிவர்களுக்கருளினார்.

இவ்வளவு மேன்மைகொண்ட இந்த ஸுப்ரஹ்மண்ய ஸஹஸ்ர நாமங்களை பிழையின்றி உச்சரிக்க வடமொழி நாமாக்களோடு தமிழிலும் அப்படியே எழுதப்பட்டிருக்கிறது. அவைகளின் உண்மைப் பொருளை அறிந்து படிக்க அதன் தாத்பர்யம் பொதிந்த உரையும்கொடுக்கப்பட்டிருக்கிறது முருகப்பெருமானை முறையோடுவழிபட்டு பில்வம், சிகப்பு புஷ்பங்கள், ரோஜா, செந்தாமரை மலர்கள் இவைகளால் இந்த நாமாக்களால் அர்ச்சனை செய்தும் பூசை செய்ய முடியாதவர்கள் நாமாவை.மட்டும் பாராயணம் செய்தும் போக போக்யாதிகளை அடைவீர்களாக. நக்கீரர் அருணகிரியார் போன்ற பெரியார்களும் முன்பு அடைந்துள்ளார்கள் என்பதும் யாவரும் அறிந்ததே.

"சீர்கொண்ட புருகூதனும் தேவர்குழுவும்
நின் திருநாமம் மறவாத பேர்"

என்றபடி இந்திராதி தேவர்கள் தம் பகைவரைவென்று பெருவாழ்வு பெற்றது முருக நாமாவின் உச்சாரணத்தினால்தான் என்பது பகழிக் கூத்தர் வாக்கு.

இந்த ஸுப்ரஹ்மண்ய ஸஹஸ்ரநாமத்தைப் பாராயணம் செய்து பேராதரவு தந்து; முருகன் திருவருளுக்கு பாத்திரர்களாகும்படிக் கேட்டுக்கொள்ளுகிறேன். இதற்கு உரை எழுதத்தூண்டிய ஆஸ்திகோத்தமரும் கிரி ப்ரெஸ்ஸின் சொந்தக்காரருமான ஸ்ரீமான் கைலாசமய்யர் அவர்களுக்கு என் நன்றி உரித்தாகுக. இன்றைக்கு நாட்டில் தெய்வபக்தி வேரூன்றி நிற்பதற்குத் தன் வெளியீடுகள் மூலம் மஹத்தான பணி செய்திருப்பதற்கு ஆஸ்திக உலகம் அன்னாருக்கு நன்றி பாராட்டக் கடமைப்பட்டிருக்கிறது அன்னார் அரோகத்ருடகாத்ரராய் வாழ திருமுருகனை ப்ரார்த்தித்துக் கொண்டு, இதில் காணும் குற்றம் குறைகளை பொறுத்தருளவும் வேண்டுகிறேன்.

**T. K. ராமச்சந்திர சாஸ்திரிகள்**

# புகழுரை

மீமாம்ஸாலங்கார, மீமாம்ஸாகேஸரி, குலபதி மஹோபாத்யாய
உபயமீமாம்ஸாப்ரவீண, மீமாம்ஸா வ்யாகரண ஸாஹித்ய
சிரோமணி பண்டிதராஜ

## K. பாலஸுப்ரம்மண்ய சாஸ்திரிகள்

பிரின்ஸ்பால் & புரபஸர், ஸம்ஸ்க்ருத காலேஜ்,
மைலாப்பூர், மதராஸ்-4.

உலகில் உபாஸிக்கப்படும் தேவதைகளில் சிறந்தவர் ஸுப்ரம்ஹண்யர். அவர் குமாரர் எனப்படுவர். அழகு மிகுந்தவரானதாலும், சிறந்த தனயனானதாலும் அப்பெயர் அன்வர்த்தமாக அமைந்ததுபோலும். தந்தை பஞ்சமுகர் தாய் ஏகமுகத்தினள் ஆக இவ்விருவரது முகங்களும் சேர்ந்து ஷண்முகனாக அமைந்திருப்பது மாத்ரு பித்ரு சக்தி யவதாரத்தைக் காட்டுகிறது. அவரது மூல மந்திரமும் ஷடக்ஷரீ தான். ஸகலவேதப்ரதிபாத்யரானதால் ப்ரும்மண்யர், அதிலும் மங்களப்ரதர் என்பது பற்றி ஸுப்ரம்மணியர் எனப்படுகிறார்..

கலியுகவரதனான ஸர்வோபாஸ்யனான இக்கடவுளின் ஸஹஸ்ரநாமார்ச்சனத்துக்கு வெகுநாட்களாகத் தேவையாயிருந்த இந்த சிறந்த ஸஹஸ்ரநாமஸ்தோத்ரம் லக்ஷக்ரந்த பரிமாணமுள்ள ஸ்ரீஸ்காந்தபுராணத்தில் ப்ரும்மா நாரதருக்கு உபதேசம் செய்வதாக, ப்ரம்ம நாரத ஸம்வாத கட்டத்தில் காணப்படுகிறது. இது எல்லா, மற்ற ஸஹஸ்ர நாமங்களைக் காட்டிலும் சிறந்தது. பலச்ருதியைக் கவனித்தாலேயே இதன் மகிமை புலப்படும். ஸகலபாபங்களும் உடனே விலகும். ஆயுள்வளரும். புக்தி முக்திகள் கிடைக்கும். விரும்பிய யாவும் கைகூடும் என்பது பலச்ருதி. ஜபத்திற்கே இந்தப்பலமாகில் பூஜா அர்ச்சனைக்குச் சிறந்த பலம் என்பது கைமுதிகந்யாய ஸித்தம். மேலும், இந்த ஸஹஸ்ரநாமம் மாத்ருகாவர்ணங்கள் ஐம்பதில் நாற்பத்தாறு எழுத்துக்கள் ஆரம்பமாக அமைந்த நாமாக்கள் அடங்கியது ஆதலால் வாக்தேவி பரிபூர்ணமாக இதில் வீற்றிருக்கிறாள் என்பது திண்ணம். 919-வது நாமம் “ ஸச்சிதானந்தாய நம:” என்

பது வேதப்ரதிபாத்யன் என்பதை விளக்கும். 867-வது "ஷட்வர்கதாத்ரே நம:" சமதமாதி ஸம்பத்து என்ற ஸாதன சதுஷ்டயத்தில் ஒன்ருன முக்ய ஸாதனத்தை அடைய ஸுப்ரம்மண்யோபாஸனை அவச்யமானது என்பதைக் குறிக்கிறது. 595-596 நாமாக்களாகிய, ப்ரும்மண்யாய நம: ப்ராம்மணப்ரியாய நம.: என்பவை ப்ரும்ம மறிந்த ஞானிகளுக்கும் உபாஸ்ய தேவனுனதுபற்றி பரும்மண்ய என்ற பெயர் அமைந்தது என்று வ்யாக்யானம் செய்வதாகப் புலப்படுகின்றன. கங்கையின் புதல்வர், அக்னியின் தனயன், சரவணபவன் என்ற நாமாக்கள் பரிசுத்தமான பூதத்ரயங்களில் உற்பத்தியைத் தெரிவித்து பாலகனின் ஆபிஜாத்யத்தை உலக முறையில் தெரிவிக்கின்றன.

இவ்விதம் பல விஷயங்கள் அடங்கிய மந்திர வடிவமான இந்த ஸஹஸ்ரநாமாவை ஜப பாராயணத்திற்கும் அர்ச்சனைக்கும் யோக்யமாக அச்சிட்டு அந்தந்த ஸ்தானத்தில் விசேஷப்பயனை அடையவேண்டுமென்று சுருக்கமாக நாமாக்களின் அர்த்தத்தையும் ஸாரமான குறிப்புடனும், பூஜைசெய்வதற்கு பிறர் ஸஹாயமில்லாமல் ஸ்வதந்திரமாகச் செய்ய முடியும்படி பூஜா கல்பத்தையும் யந்திரம் முதலியவைகளையும் ஒன்று சேர்த்து அச்சிட்டுப் புஸ்தகமாக வெளியிட்டு ஜனங்களுக்கு மகத்தான உபகாரஞ் செய்தவருமான பண்டித டி. கே. ராமசந்திர சாஸ்திரிகளுக்கு மிகவும் நன்றி செலுத்த நாம் கடமைப்பட்டிருக்கிறோம்

தமிழ், ஸம்ஸ்கிருதம் இருபாஷைகளிலும் விற்பன்னரும், வேதாந்தவித்வானும் தெய்வஞர்களில் பூஷணமாய் விளங்கும் இப்பெரிய பண்டிதர் அபிநவகவியாய் அபிநவவ்யாசராய் விளங்கி இக்காலத்தில் இந்த ஸஹஸ்ரநாம வெளியீட்டில் புகுந்து நமக்கு உபகரித்தது அவருடைய ஷண்முக பக்தியை நன்கு வெளிக்காட்டுகிறது. இச்சிறப்புடைய ஸுப்ரம்மண்ய ஸஹஸ்ர நாமத்திற்குச் சிறப்புரை கூறும் பாக்யம் அதே நாமதேயமுள்ள இந்த பாலகனுக்கு அமைந்தது கடவுள் கிருபை என்றே நம்பவேண்டும்.

இந்த ஸஹஸ்ரநாமபுஸ்தகத்தை யாவரும் வாங்கி பாராயணம் செய்தும் பூஜை செய்து அர்ச்சித்தும் முருகன் ப்ரஸாதத்திற்கு பாத்திரர்களாகும்படி சரவணபவன் அனுக்ரகிக்கவேண்டுகிறேன்.

**K. பாலஸுப்ரம்மண்ய சாஸ்திரிகள்**
பிரின்ஸ்பால்

ஓம்

அடையார், சென்னை.

# "மதிப்புரை"

கலியுக வரதன் கந்தன். எந்தப் பொருளுக்கும் நிகரில்லாதது கந்தப்பொருள். திருமூர்த்தியே குரு மூர்த்தியாகி விளங்குபவன் முருகன். யாவருக்கும் ஆறு தலைத்தரும் ஆறு முகத்தை உடையவர். வாரி வழங்க பன்னிரு கரங்களைப் பெற்றவர். முருகனைப் புகழாத தேவர்களில்லை. அன்னவரைப்பாடாத கவிக ளில்லை. கோதையின் கீதையிலும் "கூர்வேல் கொடுந் தொழிலன் நந்தகோபன் குமரன்" என்றும் நின் கையில் வேல்போற்றி என்றும் வ்யங்க்ய முறையில் காணப்படுகிறது. எல்லா இதிஹாஸ புராணங்களிலும் வேதங்களிலும் கந்தப்பெருமானைப் பலவிதமாகப் புகழ்ந்து போற்றப்பட்டிருக்கிறது.

இவ்வளவு மேன்மை பெற்று மந்த்ர வடிவமான ஸ்ரீ ஸுப்ரம்மண்யக் கடவுளுடைய திவ்ய வைபவத்தை விசுவாமித்ர மகா முனிவர் ஸ்ரீ ராமனுக்கு உபதேசித்த வாறும் ஸூத புராணிகர் சௌனகாதி முனிவர்களுக்கு அருளியவாறும் ஸகல வரப்ரதரான கந்தனது திருப்புகழ் ததும்பும் கந்த புராணத்தின்கண் ரத்னம்போல்

விளங்கும் இந்த ஸுப்ரமண்ய ஸஹஸ்ர நாமத்திற்கு; ஸகல சாஸ்திரங்களிலும் தேர்ச்சிபெற்று விசேஷமாக மந்திர சாஸ்திரத்திலும் தேர்ச்சிபெற்று தெய்வா னுக்ரகம்பெற்று விளங்கும் மந்த்ர மூர்த்தியாய் சாந்தம் தவம் சந்தோஷம் நிறம்பி ப்ரகாசிக்கும் மகரிஷி ஸ்ரீராம சந்திர சாஸ்திரிகள் அவர்களால் தூய தமிழில் எழுதிய விரிவுரை (திராவிட பாஷ்யம்) மிகவும் தெளிவாகவும் சரித்திர வரலாறுகளுடனும் அமைந்திருப்பது விசேஷ மகிழ்ச்சியளிக்கிறது. முருகன் பெருமை அறிந்து கந்தனை வழிபட, மந்த்ரம் யந்த்ரம் பூஜா கல்பம் முதலியதும் சேர்ந்திருப்பது மிகவும் போற்றத்தக்கது. இதுபோன்ற அறநெறி நூல்களை மேன்மேலும் வெளி யிடும்படி ஸ்ரீ சாஸ்த்திரிகள் அவர்களுக்கும் கிரி ப்ரஸ் சொந்தக்காரர் ஸ்ரீமான் கைலாசம் அய்யர் அவர் களுக்கும் உத்ஸாகம் ஊட்டி இந்த ஸ்ரீஸுப்ரம்மண்ய ஸஹஸ்ர நாமத்தைப்படித்து நன்கு முருகனைப் பூஜித்து ஆஸ்திக மெய்யன்பர்கள் யாவரும் குஹப்பெருமான் அருளுக்குப் பாத்திரர்களாகி ஸகல ச்ரேயஸ்ஸுகளையும் அடைவார்களாக.

சுபம்

*14-6-62* *ஸ்வாமி வேங்கடேச்வரானந்தா*

தலைவர், ஆரோக்கிய ஆஸ்ரமம்,

காந்திநகர், அடையாறு, சென்னை-20.

# மதிப்புரை

சென்னை.
24-3-62

ஸுப்ரம்ஹண்ய பக்தசிரோமணி, திருப்புகழ்ச் செல்வன்
**T. M. Krishnaswami Aiyer,**
*Advocate, Mylapore, Madras.*

பல விசேஷ பிருதுகளைப் பெற்று மஹாபண்டிதராய் விளங்கும் ஸ்ரீ. டி. கே. ராமசந்திர சாஸ்திரிகளால் வெளியிடப் படும் ஸ்ரீ ஸுப்ரம்ஹண்ய ஸஹஸ்ர நாமவிளக்கம் மிகவும் கவர்ச்சிகரமாயும், எளியநடையில் தெளிவாகவும் யாவர்க்கும் உபயோககரமாயும் இருக்கிற விஷயத்தைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

ப்ரம்மஜ்ஜோதிப்பிழம்பு ஒரு ரூபமாகி கருணைகடாக்ஷத்தின் வெளித்தோற்றமாய் ஷண்முகக்கடவுளாய் அமைந்து, ரூபங்கள் எல்லாம் தானாகி அரூபமாய் விளங்கும் ஸத்தாகி திருமூர்த்தி களும் கலந்து நின்ற ஓங்காரப் பொருளாய் ப்ரகாசிக்கும் ஸ்ரீ ஷண்முக விலாஸத்தை அரிய முருகா என்று போற்று பவருக்கு கணக்கிடக் கூடாத ஆயிரபாவக்கரூணை இந்த ஸஹஸ்ர நாம விளக்கத்தால் புலனாகும். சப்த ப்ருஹ்மமும், ஷண்முக ப்ருஹ்மமும், ஜோதி ப்ருஹ்மமும் ஒன்றாகும். கந்த நாம விலாஸத்தை போற்றுவதற்கு இது அருமையான வெளியீடு. ஸ்ரீ குஹப்பெருமானை முறைப்படி வழிபட்டு கந்தன் அருள்பெற ஸ்ரீ ஸுப்ரம்ஹண்ய பூஜாகல்பமும், ஸுப்ரம்ஹண்ய மஹாயந்திர மந்திரமும் தெளிவாய் அமைந்திருப்பது திவ்ய கற்பகப் பொன் மலர் நறு மணம் பெற்றது போல் அமைந் திருக்கிறது.

ஸ்ரீ சாஸ்திரிகள் அவர்களுக்கு தமிழ் உலகம் மிகவும் நன்றிசெலுத்தக் கடமைப்பட்டதாக நிற்கும். ஸ்கந்தன் அருள் பாலிக்க, பக்திபெருக, இவ்வெளியீடு உதவவே முருகப் பெருமான் அருள் செய்வாராக!

—திருப்புகழ்மணி

**Kavi Yogi Maharshi,**
**Shuddhananda Bharathi,**
*President, Yoga Samaj, Sri Ramanagar, Adyar, Madras-20.*

அருளார் முகமும் அடியார்க்கபயம்
தருபொற்கரமும் தணலார் விழியும்
கருணைப் பொலிவும் கனிவாய் நகையும்
திருமார் பழகும் திகழும் முருகா!

முருகன் கலியுக வரதன். முருகனைப் போற்றாத தமிழர்கள் இருக்கமாட்டார்கள். ஆதி சங்கரர் முருகனைப் போற்றியிருக்கிறார். ஸ்காந்த புராணம் முருகனைப்பற்றி விரிவாகச் சொல்லியிருக்கிறது. அருணகிரியார் மனமுருகப் பாடியிருக்கிறார். முருகனை நினைக்க நினைக்க உள்ளம் உருகும், இன்பம் பெருகும்.

அன்பு முருகா அருணகிரிக்குதவும்
இன்ப முருகா இளமுருகா துன்பம்
துடைக்கும் இனிய துரையே என்னுண்மை
அடைக்கலத்தை நீ யேற்றருள்.

இவ்வாறு ஜீவாத்மா பரமாத்ம முருகனைச் சரணடைகிறது. தெய்வ உபாசனையில் அர்ச்சனம் வந்தனம் என்பவை முதன்மையானவை. முருகன் புகழை ஓதி அர்ச்சனை செய்தால் மனம் அமைதி பெறும். துன்பம் ஒழியும். கவலை தீரும். சிவ முருகன் அர்ச்சனைக்குத் தமிழில் சிவ முருகன் வழிபாடு என்ற அரிய நூல் உள்ளது. ஸம்ஸ்கிருதத்தில் ஒரு அர்ச்சனை மாலை முன்பே ஏற்பட்டிருக்கிறது. அதற்கு பண்டிதவரர் ஸ்ரீமத் T. K. ராமசந்திர சாஸ்திரிகள் அரிய விரிவுரை எழுதியிருக்கிறார்கள். அர்ச்சனையின் ஒவ்வொரு வரிக்கும் தெளிவான விளக்கம் கூறும் இந்த நூலை முருக பக்தர்கள் கொண்டாடுவார்கள் என்று நம்புகிறேன்.

சாஸ்திரிகள் வேதாகம புராண இதிகாஸ காவ்யம் நாடக பண்டிதர் அபரவித்தை பரவித்தை இரண்டையும் உபாசித்தவர். இவர்கள் எழுதிய விரிவுரைக்குத் தனிச் சிறப்புண்டு. ஆஸ்திக பக்தர்கள் இந்த ஸ்கந்தோபாஸனையை ஒவ்வொரு நாளும் செய்து இகபர சுகங்களைப் பெறுவார்களாக.

**அள்ளிப்பருகி யுன் ஆனந்த கானரசம்**
**துள்ளிக்குதிக்கத் துறுதுறுத்தேன்—உள்ளத்தில்**
**எக்களித்துப் பொங்கும் இனிய உனதருளில்**
**முக்குளிக்கப்பார் என்முகம்.**

**—சுத்தானந்த பாரதி.**

---

ஓம் நமோ பகவதே சரவணபவாய

# ஸ்ரீ ஸுப்ரம்மண்ய ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரம்

**ரிஷய :**

ஸர்வசாஸ்த்ரார்த்த தத்வஞஸர்வ லோகோபகாரக
வயஞ்சாதிதய : ப்ராப்தா : ஆதிதேயோஸிஸுவ்ரத
ஞானதானேன ஸம்ஸார ஸாகராத்தார யஸ்வந :
காலள கலுஷசித்தாயே நரா: பாபரதா: ஸதா
கேந ஸ்தோத்ரேண முச்யந்தே ஸர்வபாதக பந்தனே :
இஷ்டஸித்தி கரம்புண்யம் து:.க தாரித்ரிய நாசனம்
ஸர்வரோகஹரம் ஸ்தோத்ரம் ஸூதேநோவக்துமர்ஹஸி

**ஸூத :**

ச்ருணுத்வம்ருஷய: ஸர்வே நைமிசாரண்ய வாஸிந :
தத்வஞாநதபோநிஷ்டா : ஸர்வ சாஸ்த்ர விசாரதா :
ஸ்வயம்பு வாப்ராப்ரோக்தம் நாரதாய மஹாத்மனே
ததஹம் ஸம்ப்ரவக்ஷ்யாமி ச்ரோதும் கௌதூஹலம்யதி

**ரிஷய :**

கிமாஹ பகவாந் ப்ரம்மா நாரதாய மஹாத்மனே
ஸூதேபுத்ர மஹாபாக வக்துமர்ஹஸி ஸாம்ப்ரதம்

**ஸூத :**

திவ்யஸிம்ஹா ஸனாஸீநம் ஸர்வதேவை ரபிஷ்டுதம்
ஸாஷ்டாங்கம் ப்ரணிபத்யைனம் ப்ரம்ஹாணம் புவனேச்வரம்
நாரத : பரிபப்ரச்ச க்ருதாஞ்சலி : உபஸ்தித:

**நாரத :**

லோகநாத ஸுரச்ரேஷ்ட ஸர்வக்ஞ கருணாகர
ஷண்முகஸ்ய பரம்ஸ்தோத்ரம் பாவனம் பாபநாசனம்
ஹேதாத : புத்ர வாத்ஸல்யாத் தத்வதப்ரண தாயமே
உபதிஷ்ட்வா துமாமவ ரக்ஷரக்ஷ க்ருபாநிதே

**ப்ரம்மா :**

ச்ருணுவக்ஷ்யாமிதேவர்ஷேஸ்தவ ராஜமிதம்பரம்
மாத்ருகா மாலிகாயுக்தம் ஞானமோக்ஷ ஸுகப்ரதம்
ஸஹஸ்ராணிச நாமாநிஷண்முகஸ்ய மஹாத்மன :
யாநிநாமாநி திவ்யாநி து : கரோக ஹராணிச
ஜபமாத்ரேண ஸித்யந்தி மனஸா சிந்திதான்யபி

இஹாமுத்ர பரம்போகம் லபதேநாத்ர ஸம்சய :
இதம் ஸ்தோத்ரம் பரம்புண்யம் கோடியக்ஞ பலப்ரதம்
ஸந்தேஹோ நாத்ரகர்தவ்ய : ச்ருணுமே நிஸ்சிதம்வச:
அஸ்யஸ்ரீ, ஸுப்ரம்ஹண்ய ஸஹஸ்ரநாம ஸ்தோத்ர மாலா
மஹாமந்த்ரஸ்ய ப்ரம்ஹாரிஷி:, அநுஷ்டுப் சந்த :
ஸ்ரீஸுப்ரம்ஹண்யோ தேவதா, சரஜந்மா அக்ஷய இதிபீஜம்
சக்திதர: அக்ஷய கார்திகேய இதி சக்தி : க்ரௌஞ்சதர
இதி கீலகம் (சிகிவாஹன இதிகவசம் ஷண்முகாய இதி
த்யானம்) ஸ்ரீ ஸுப்ரம்ஹண்ய ப்ரஸாத ஸித்யர்தே அர்சனே
ஜபஹோமாதி ஷுச விநியோக :
ஓம் சம் சக்திதராய அங்குஷ்டாப்யாம்நம : ஹ்ருதயாய நம :
ரம் ரஹஸ்யவிதேநம: தர்ஜநீப்யாம் நம : சிரஸேஸ்வாஹா
வம் வரேண்யாயநம : மத்யமாப்யாம் நம : சிகாயை வஷட்
ணம்ப்ரணவார்த்தாய நம: அநாமிகாப்யாம் நம:
கவசாயஹும்
பம் பர்காய நம: கனிஷ்டிகாப்யாம்நம: நேத்ரத்ராயவௌஷட்
வம் வராயநம: கரதலகரப்ருஷ்டாப்பயாம் நம: அஸ்த்ராயபட்
பூர்புவஸ்ஸுவரோமிதிதிக் பந்த: (த்யானம்)
த்யாயேத் ஷண்முகம் இந்து கோடி ஸத்ருசம் ரத்னப்ரபா
சோபிதம் ; பாலார்கத்யுதி ஷட்கிரீடவிலஸத்கேயூர
ஹாராங்விதம் ; கர்ணாலம்பித குண்டலப்ரவிலஸத்
கண்டஸ்தலீ சோபிதம் ; காஞ்சீகங்கண கிங்கிணீரவ
யுதம் ச்ருங்கார ஸாரோதயம்.

(த்யாயேதீப்ஸிதஸித்திதம் சிவஸுதம் ச்ரீத்வாதசாக்ஷம் குஹம் ; கேடம்குக்குடமங்குசஞ்ச வரதம் பாசம் தநுஸ்சக்ரகம்; வஜ்ரம் சக்திமஸிஞ்ச சூலமபயம்தோர்பி: த்ருதம்ஷண்முகம் ; தேவம்சித்ரமயூரவாஹனகதம் சித்ராம்பராலங்ருதம்)

பிறகு பாராயணம் அல்லது அர்ச்சனை செய்யவும்.

நைமிசாரண்யவாஸிகளாகிய சௌனகாதி முனிவர்கள் ஸூதபுராணிகரைக் கண்டு வணங்கி, இக்கலியுகத்தில் மனிதர்கள் தர்மத்தையும் ஆசாரத்தையும் விட்டு பாபத்தினால் கஷ்டப்படுகிறார்களே, அவர்கள் அவ்வித கஷ்டத்திலிருந்து நீங்கி ஸௌக்யம் அடைய உத்தமமான ஒரு

கடவுளின் ஸ்தோத்ரத்தை உபதேசிக்கவேண்டும் என்று கேட்க, அவர் முனிவர்களைப்பார்த்து பின்வருமாறு சொன்னார் :

முன்னொருசமயம் நாரதர் ப்ரம்மதேவனை இவ்விதம் கேட்க ப்ரம்மா நாரதரைப்பார்த்து சொன்னதை இப்பொழுது நான் உங்களுக்கு அப்படியே சொல்லுகிறேன் என்று சுப்ரஹ்மணிய சஹஸ்ரநாமத்தின் பெருமையைச் சொன்னார். நான் சொந்தமாகச் சொல்லவில்லை ப்ரும்மா சொன்னதைச் சொல்லுகிறேன் என்றார். இவ்விஷயம் கீழே விவரிக்கப்பட்டு இருக்கிறது.

முனிவர்கள் நாரதருக்கு ப்ரம்மா என்ன சொன்னார் என்றுவினவ ஸூத புராணிகரும் கடவுளை த்யானம் செய்து கொண்டு சொன்னதாவது.

ஸ்ரீ ஷண்முகஸுப்ர்ம்மண்யருடைய திவ்யஸஹஸ்ரநாம ஸ்தோத்ரம் இருக்கிறது. அது மிகவும் உயர்வானது. அறிவையும் மோக்ஷத்தையும் எளிதில் அளிக்கவல்லது. ஸகலவ்யாதிகளையும் போக்கடிக்கக்கூடியது. எல்லாவித துக்கங்களையும் நாசம் செய்ய வல்லமையுடையது: ஜபமாத்ரத்தாலேயே எல்லாப்பலனும் கிடைக்கின்றது. ஜபம் செய்த மாத்திரத்தில் கோடியஞ்ஞும் செய்த பலம் ஏற்படும். இதில் யாதொரு ஸந்தேகமுமில்லை. என்வாக்யத்தை நம்பு என்று நாரதருக்கு ப்ரம்மா சொன்னார். ஆகவே நீங்களும் ஸுப்ரம்மண்ய ஸஹஸ்ரநாமத்தைப் பாராயணம் செய்யுங்கள் அல்லது பூக்களால் அர்ச்சனை செய்யுங்கள். அதன் முறையும் இவ்விதம் அங்கன்யாசம் கரன்யாசங்களுடனும் இம்முருக ஸஹஸ்ரநாமாவளியுடனும் அமைந்திருக்கிறது.

இவ்விதம் மேன்மைதங்கிய ஸுப்ரம்ஹண்ய ஸஹஸ்ர நாமத்தை ப்ரம்மா நாரதருக்குச்சொல்ல நாரதர்வியாசருக்குச் சொல்ல வ்யாசர் ஸூதருக்குச் சொல்ல ஸூதர் நைமிசாரண்யமுனிவர்களுக்குச் சொன்னார். ஆகவே இம்முறைப்படி முன்பு ரிஷிசந்தஸு முதலியவைசொல்லித்யானம் செய்து கொண்டு நறுமலர்களால் கந்தபிரானது பாதாரவிந்தங்களில் அர்ச்சித்து துன்பங்களிலிருந்து விடுபட்டு யாவரும் முருகனருளை அடைவீராக!

---



## ओं नमो भगवते ह्रीं सुब्रह्मण्याय नमः

## ஓம் நமோ பகவதே ஹ்ரீம் ஸுப்ரஹ்மண்யாய நம:

वागीशाद्याः सुमनसः सर्वार्थानां उपक्रमे ।
यं नत्वाकृतकृत्याः स्युः तन्नमामि गजाननम् ॥
उमाकोमल हस्ताब्ज संभावित ललाटिकं
हिरण्य कुंडलंवन्दे कुमारं पुष्करस्रजम् ॥

*வாகீசாத்யா: ஸுமநஸ: ஸர்வார்த்தானும் உபக்ரமே ।*
*யம் நத்வாக்ருதக்ருத்யா: ஸ்யு: தம்நமாமி கஜானனம் ॥*
*உமாகோமள ஹஸ்தாப்ஜ ஸம்பாவித லலாடிகம் ।*
*ஹிரண்ய குண்டலம்வந்தே குமாரம் புஷ்கரஸ்ரஜம் ॥*

*1.* **ओं अचिन्त्यशक्तये नमः** *ஓம் அசிந்த்யசக்தயே நம:*

மனதிலும் நினைத்துப் பார்க்கமுடியாத திறமை உடையவருக்கு நமஸ்காரம்.

சாதாரணமாக உலகத்தில் உள்ள மற்ற எல்லோருடைய திறமைகளையும் இவ்வளவு என்று எடுத்துக் கூறவும், காட்டவும் முடியும்; ஆனால் முருகனுடைய திறமையை இவ்வளவு என்றும், இத்தன்மையது என்றும், எடுத்துக்கூறவும் காட்டவும் முடியாது. அதுமட்டுமல்ல, முருகனது திறனை இவ்வளவு என்று மனதினாலும் கருதமுடியாது. அவனது ஆவிர்பாவமும் செயல்களும் வாக்குக்கும் மனதுக்கும் எட்டாதவை. ஆதிகவியாகிய வால்மீகி முனிவரும் முருகனது திருவவதாரத்தைத் தன் ராமாயண காவியத்தில் குமாரஸம்பவம் என்று கூறினார். கந்த புராணத்தில் திரு கச்சியப்பசிவாச்சாரியாரும் "அருவமும் உருவமாகி" என்று குமார ஸம்பவத்தையே சிறப்பித்துக் கூறியுள்ளார். ஆகவே முருகனது சக்தியின் அளவு நமது ஐம்புலன்

களுக்கும் விஷயமாகாது. அது மட்டுமல்ல. மனதினாலும் நினைக்கவும் முடியாதது. அவ்வளவு சக்திவாய்ந்தவர் முருகன். அவரது புகழே இந்த 1008 பெயர்களாகும்.

**2. अनघाय नमः** *அநகாய நம:*

பாவம் இல்லாதவருக்கு நமஸ்காரம்.

**3· अक्षोभ्याय नमः** *அக்ஷோப்யாய நம:*

கலக்கமுடியாதவருக்கு நமஸ்காரம்.

சாதாரணமாக மற்றவர்களை நயமாகவோ பயமுறுத்தியோ அவர்களுடைய மனதில் ஒருவித பயந்த உணர்ச்சியை உண்டு பண்ணி மனதைக் கலக்கிவிடலாம். ஆனால் முருகனது மனதை யாவராலும் அசைக்க இயலாது.

**4. अपराजिताय नमः** *அபராஜிதாய நம:*

எப்பொழுதும் எங்கும் எவ்விதத்திலும் தோல்வியடையாத வருக்கு நமஸ்காரம்.

**5. अनाथवत्सलाय नमः** *அனாதவத்ஸலாய நம:*

காப்பாற்றக்கூடிய ஆதரவு அற்றவர்கள் விஷயத்தில் மிகுதியான அன்புடையவருக்கு நமஸ்காரம்.

**6. अमोघाय नमः** *அமோகாய நம:*

எவருடைய (பிறப்பும் செய்கையும்) கோபமும் அருளும் (பலனளிக்காது போகாமல்) விசேஷமான பலனுள்ளதாக உள்ளதோ மேலும் அம்முருகனது விஷயமாகச் செய்யும் பக்தர் களுடைய துதி பூசனை முதலியவை பயனில்லாது போகாமல் பக்தர்களின் விருப்பத்திற்கு மேல் அதிகமான பயனை உரிய காலத்தில் அளிப்பவன். வியர்த்தமற்ற பயனுருவான அம் முருகனுக்கு நமஸ்காரம்.

**7. अशोकाय नमः** *அசோகாய நம:*

எவ்விடத்தும் எக்காலத்தும், துக்கத்தினால் குன்றிய அறிவு இல்லாது, எப்பொழுதும் நிறைந்த ஐம்புலன்களின் நிறையறி வுள்ளவருக்கு நமஸ்காரம்.

இஷ்டமான பொருள்கள் தன்னைவிட்டு விலகியகாலத்திலும் ஆசைப்பட்ட பொருள் தனக்குக் கிடைக்காத காலத்திலும் ஒருவித துக்கத்தினால் ஐம்புலன்களும் தம் தம் வேலையில் ஈடுபடாமை சோகம் எனப்படும்.

8. **अजराय नमः** *அஜராய நம:*

கிழத்தன்மை இல்லாது எப்பொழுதும் குமாரப் பருவத்தி லேயே இருப்பவனுக்கு நமஸ்காரம்.

"குன்றமெறிந்தாய் குறைகடலிற் சூர்தடிந்தாய்
புன்றலைய பூதப்பொருபடையாய்—என்றும்
இளையாய் அழகியாய் ஏறூர்ந்தான் ஏறே
உளையாய் என் உள்ளத்து உறை"

என்ற நக்கீரனரின் வாக்கும் இவ்விடத்து நினைவிற்குரியது.

9. **अभयाय नमः** *அபயாய நம:*

தான் பயப்படாமல் இருந்துகொண்டு துஷ்டர்களுக்கு பயத்தை உண்டுபண்ணுபவனும்; ஸாதுக்களுக்கு உள்ள பயத்தை நீக்குபவனுன முருகனுக்கு நமஸ்காரம்.

**भीषास्माद्वातः पवते, भीषोदेति सूर्यः भीषा स्मादग्निश्चेन्द्रश्च, मृत्युर्धावति पंचम इति** (*பீஷாஸ்மாத்வாத: பவதே, பீஷோதேதி ஸூர்ய: பீஷாஸ்மாதக்நிஸ்சேந்த்ரஸ்ச, ம்ருத்யுர்தாவதி பஞ்சம இதி*)

என்ற உபநிடத வாக்கியத்தால் காற்று, ஸூர்யன், அக்னி, இந்திரன், எமன் முதலியவர்கள்கூட எவரிடமிருந்து பயந்து தம் தம் வேலைகளில் ஈடுபடுகிறார்களோ, மேலும்,

**अभयंप्रतिष्ठांविन्दते अथसोऽभयंगतो भवति** (*அபயம் ப்ரதிஷ்டாம்விந்ததே அதஸோபயம்கதோ பவதி*)

என்ற வேதாந்த வாக்கியத்தாலும் நித்தியமாய் உள்ளவனும் பயமற்றவனுமான பரம்பொருளாகிய முருகக் கடவுளை சரணுகதி அடைந்தால் தானும் பிரதிஷ்டிதனாய் பயமற்றவனாக ஆகிவிடு கிறான். முருகன் இத்தன்மையுள்ளவன் என்பதை இதனால் விளக்கியுள்ளார்.

10. **अत्युदाराय नमः** *அத்யுதாராய நம:*

ஒரு முகமும் இரண்டு கைகளும் போதாது என்று ஆறு முகங்களும் பன்னிரு கைகளும் கொண்டு கருணையுடன் அன்போடு வாரி வழங்கும் வள்ளலுக்கு நமஸ்காரம்.

இந்திராதி தேவர்கள் "இனி நீங்களே இந்திரனாக இருக்க வேண்டும்" என பிரார்த்திக்க, "நீங்களே இந்திரனாக இருங்கள்,

நான் ஸேனுதிபதியாக இருந்து மீண்டும் இந்திர பதவியை அளிக்கின்றேன்" என்று திருவாய் மலர்ந்தருளினர். இத்தகைய உதாரகுணமுள்ளவருக்கு நமஸ்காரம்.

**11. अघहराय नमः** *அகஹராய நம:*

பக்தர்களது பாபத்தைப் போக்கக்கூடியவர்க்கு நமஸ்காரம். (பந்தத்தை நீக்கி முக்தியை அளிப்பவர் என்பது உள்ளுரை).

**12. अग्रगण्याय नमः** *அக்ரகண்யாய நம:*

அழகிலும் உருவத்திலும் குணத்திலும் வீரத்திலும் அறிவிலும் பரோபகாரம் செய்வதிலும் அருள்புரிவதிலும் துஷ்டநிக்ரக சிஷ்டபரிபாலனம் முதலிய எல்லாவற்றிலும் முதன்மையாக எண்ணத்தகுந்தவருக்கு நமஸ்காரம்.

**13. अद्रिजासुताय नमः** *அத்ரிஜாஸுதாய நம:*

பர்வதராஜன் பெண்ணான பார்வதியின் குமாரனுகிய முருகனுக்கு நமஸ்காரம் (நிலையான மனதுள்ளவருக்கு என்பது உள்ளுரை).

கர சரணுதி அவயவங்களோடு கூடியிருப்பவனும் விவேகம் கருணை அன்பு முதலிய நற்குணமில்லாத தக்ஷனுக்குப் பெண்ணயிருப்பதைக்காட்டிலும் மனமில்லாத பனிமலைக்குப் பெண்ணுக அமைவதே நலம் என்றெண்ணி ஸதியாகிய தாக்ஷாயணி பனிமலைக்குப் பெண்ணுக அவதரித்தாள் என்பது கந்தபுராண வரலாறு.

**14. अनन्तमहिम्ने नमः** *அனந்தமஹிம்னே நம:*

எல்லையில்லாத அதாவது முடிவு இல்லாத அளவிடமுடியாத பெருவடிவமுடையவருக்கு வணக்கம்.

"**अणोरणीयान् महतोमहीयान्**" (*அணோரணீயான் மஹதோமஹீயான்*)

என்ற வேதத்தின் கருத்தை இங்கு விளக்கி உள்ளார்.

**15. अपाराय नमः** *அபாராய நம:*

கரை இல்லாதவருக்கு நமஸ்காரம் (எல்லையில்லாத பெருமையுடையவர் என்பது உள்ளுரை).

**16. अनन्तसौख्यप्रदाय नमः** *அனந்தஸௌக்யப்ரதாய நம:*

கணக்கிட முடியாத எல்லையற்ற, அதிகமான ஸௌக்யத்தைப் பக்தர்களுக்கு அளிப்பவருக்கு நமஸ்காரம்.

17. **अव्ययाय नमः** *அவ்யயாய நம:*

என்றும் குறைவிலாதவருக்கு நமஸ்காரம்.

18. **अनन्तमोक्षदाय नमः** *அனந்தமோக்ஷதாய நம:*

ஸாலோக்யம், ஸாமீப்யம், ஸாரூப்யம், ஸாயுஜ்யம் என்ற மோக்ஷத்தைக் காட்டிலும் அழிவற்ற நிலையான மோக்ஷத்தைக் கொடுப்பவருக்கு நமஸ்காரம்.

19. **अनादये नमः** *அனாதயே நம:*

தனக்கு முன்பு ஒரு மூலகாரணம் இல்லாதவருக்கு நமஸ்காரம். குடம் தோன்றுவதற்குமுன் மண்போலவும் குண்டலம் தோன்றுவதற்குமுன் பொன்போலவும் தனக்கு முன் ஒரு பொருள் இல்லை என்பது பொருள். சிவனது நெற்றிக் கண்ணின் நெருப்புப் பொறியிலிருந்து சரவணப்பொய்கையில் உண்டானார் முருகன் என்பது சாதாரண மக்களின் தோற்றத் திற்காக அமைந்தது. தேவதைகளின் காரியத்திற்காக அவ்வப் பொழுது ஆங்காங்கு ஆவிர்பவிப்பதை (தோன்றுவதை) அவதாரம் என்று சொல்லுவது வழக்கம்.

*தேவானாம் கார்யஸித்யர்த்தம் ஆவிர்பவதி ஸாயதா |*
*உத்பன்னேதி ததாலோகே க்யாதாதேவீ பவிஷ்யதி ||*

என்றும் தேவீ மகாத்ம்யம் கூறுகின்றது.

"முன்னவர்க்கும் முன்னாகுவோர் தமக்கும் முற்பட்டுத்
தன்னை நேரிலாது ஈசனும் தனிப்பெயர் தாங்கி
இன்னுயிர்க்குயிராய் அருவ உருவமாய் எவர்க்கும்
அன்னைதாதையாய் இருந்திடும் பரமனே அவன் காண்"

**गांगेय कार्तिकेयादि नामभिः परमेश्वरः |**
**निगद्यते मुनिश्रेष्ठैः मूढाः भिन्नतयाविदुः ||**

*காங்கேய கார்திகேயாதி நாமபி: பரமேச்வர: |*
*நிகத்யதே முனிஸ்ரேஷ்டை: மூடா: பின்னதயாவிது: ||*

என்ற கந்தபுராண வசனங்களாலும் அவருக்கு வேறு ஆதி இல்லை என்று அறிக.

20. **अप्रमेयाय नमः** *அப்ரமேயாய நம:*

ப்ரத்யக்ஷம் முதலிய ப்ரமாணங்களால் (பக்தியில்லாதவர் களுக்கு) அறியமுடியாதவருக்கு நமஸ்காரம்,

**21. अक्षराय नमः** *அக்ஷராய நம:*

அழிவு இல்லாதவருக்கு நமஸ்காரம் (அகாரம் முதலிய அக்ஷரங்களின் வடிவு கொண்டவருக்கு என்று பொருள்.)

**22. अच्युताय नमः** *அச்யுதாய நம:*

நழுவுதல் இல்லாதவருக்கு நமஸ்காரம் (தன்னை அடைந்த வரை விட்டுப் பிரியாதவர்) என்றும் பொருள்படும்.

**23. अकल्मषाय नमः** *அகல்மஷாய நம:*

குற்றமற்றவருக்கு வணக்கம்.

**24. अभिरामाय नमः** *அபிராமாய நம:*

மிக அழகுள்ளவருக்கு நமஸ்காரம்.

**25. अग्रधुर्याय नमः** *அக்ரதுர்யாய நம:*

சகலவித பொறுப்புகளையும் தாங்கி முன்னின்று (பக்தர் களுக்கு) அருளுபவருக்கு நமஸ்காரம்.

**26. अमितविक्रमाय नमः** *அமிதவிக்ரமாய நம:*

அளவுகடந்த வல்லமை உடையவருக்கு நமஸ்காரம்.

சத்துருவின் இருப்பிடம் சென்று அவனை வென்று வெற்றி கொள்ளுதல் விக்ரமம் எனப்படும்.

**27. अनाथनाथाय नमः** *அநாதநாதாய நம:*

ஆதரவற்றவர்களுக்கு ஆதரவளிப்பவனுக்கு நமஸ்காரம்.

**28. अमलाय नमः** *அமலாய நம:*

ஆணவம் கன்மம் மாயை என்ற மும்மலங்களும் இல்லாத வருக்கு நமஸ்காரம்.

**29. अप्रमत्ताय नमः** *அப்ரமத்தாய நம:*

எப்பொழுதும் அஜாக்ரதையின்றி (பக்தர்களை காப்பாற்றும் விஷயத்தில்) ஊக்கமுள்ளவருக்கு நமஸ்காரம்.

**30. अमरप्रभवे नमः** *அமரப்ரபவே நம:*

தேவர்களுக்குள் மிக சாமர்த்யமுள்ளவருக்கு நமஸ்காரம். உலகில் செல்வாக்கு உள்ளவரை “ ப்ரபு ” என்று சொல்லுவர்,

31. **अरिन्दमाय नमः** அரிந்தமாய நம:

சத்துருக்களை அடக்கும் தன்மை உள்ளவருக்கு நமஸ்காரம்.

32. **अखिलाधाराय नमः** அகிலாதாராய நம:

பஞ்ச மகாபூதங்கள் உள்பட எல்லாவற்றிற்கும் ஆதாரமாய் இருப்பவருக்கு நமஸ்காரம்.

சாதாரணமாக எந்தப் பொருளும் ஒரு பொருளின்மேல் இருப்பதுதான் வழக்கம். ஆனால் கடவுள் அப்படி அல்ல. அவர் எல்லாவற்றிற்கும் ஆதாரமாய் இருந்து தனக்கு வேறு ஒரு ஆதாரம் இல்லாதுதானே தனக்கு ஆதாரமாக இருக்கிறார்.

**स्वेमहिम्निप्रतिष्ठित इति** ஸ்வேமஹிம்னிப்ரதிஷ்டித இதி என்ற வேதத்தின் பொருளை இங்கு விளக்குகிறார்.

33. **अणिमादिगुणाय नमः** அணிமாதிகுணாய நம:

அணிமா, மஹிமா, கரிமா, லகிமா, ப்ராப்தி:, ப்ராகாம்யம், ஈசித்வம், வசித்வம் என்ற எட்டுவித ஸித்திகளையும் உடையவருக்கு நமஸ்காரம்.

34. **अग्रण्ये नमः** அக்ரண்யே நம:

(பக்தர்கள்) யாவருக்கும் நல்ல பதவியை அளிப்பவருக்கு நமஸ்காரம். இந்த நாமாவை (முறையுடன்) தனியாக ஜபம் செய்தால் உத்தியோக லாபம் உண்டாகும்.

35. **अचंचलाय नमः** அசஞ்சலாய நம:

அசையாது நிலையாக இருப்பவருக்கு நமஸ்காரம்.

36. **अमरस्तुत्याय नमः** அமரஸ்துத்யாய நம:

தேவர்களால் துதிக்கத்தகுந்தவருக்கு நமஸ்காரம்.

37. **अकल्काय नमः** அகளங்காய நம:

எவ்வித கெடுதலும் இல்லாதவருக்கு நமஸ்காரம்.

38. **अमिताशनाय नमः** அமிதாஶநாய நம:

நிறைய சாப்பிடுபவருக்கு நமஸ்காரம்.

39. **अग्निभुवे नमः** அக்னிபுவே நம:

நெருப்பிலிருந்து உண்டானவருக்கு நமஸ்காரம்.

40. **अनवद्यांगाय नमः** அநவத்யாங்காய நம:

குற்றமற்ற அவயவங்களை உடையவருக்கு நமஸ்காரம்.

41. **अद्भुताय नमः** அத்புதாய நம:

உலகிற்கே ஒரு தனி ஆச்சரியமாய் இருப்பவருக்கு நமஸ்காரம்.

42. **अभीष्टदायकाय नमः** அபீஷ்டதாயகாய நம:

(பக்தர்களுக்கு) விரும்பிய பொருளை கொடுப்பவருக்கு நமஸ்காரம்.

43. **अतीन्द्रियाय नमः** அதீந்த்ரியாய நம:

ஐம்புலன்களுக்கும் எட்டாதவருக்கு நமஸ்காரம்.

44. **अप्रमेयात्मने नमः** அப்ரமேயாத்மனே நம:

ப்ரமாணங்களால் அறியமுடியாத ஆத்ம ஸ்வருபத்தை உடையவருக்கு நமஸ்காரம்.

45. **अदृश्याय नमः** அத்ருச்யாய நம:

(பக்தி இல்லாதவர்களால்) பார்க்கமுடியாதவருக்கு நமஸ்காரம். இந்தக் கண்ணால் கடவுளது உருவைப் பார்க்க இயலாது. ஞானக்கண்ணால்தான் பார்க்கமுடியும். ஆகவேதான் கீதையில்

**दिव्यंददामितेचक्षुः** திவ்யம்ததாமிதேசக்ஷு:

என்று வ்யாசர் கண்ணன் வாயிலாகக் கூறியுள்ளார்.

46. **अव्यक्तलक्षणाय नमः** அவ்யக்தலக்ஷணாய நம:

யாவராலும் நன்கு அறியமுடியாத லக்ஷணத்தை உடையவருக்கு நமஸ்காரம்.

47. **आपद्विनाशकाय नमः** ஆபத்விநாசகாய நம:

பக்தர்களுக்கு ஏற்படும் துன்பத்தை நாசம் செய்பவருக்கு நமஸ்காரம்.

48. **आर्याय नमः** ஆர்யாய நம:

யாவராலும் பூஜிக்கத்தகுந்தவருக்கு நமஸ்காரம்.

49. **आढ्याय नमः** ஆட்யாய நம:
நிறைந்த செல்வம் உள்ளவருக்கு நமஸ்காரம்.

50. **आगमसंस्तुताय नमः** ஆகமஸம்ஸ்துதாய நம:
வேதங்களால் புகழப்பெற்றவருக்கு நமஸ்காரம்.

**निषग्वैरसमायुतैः कालैर्हरित्वमापन्नैः**
**इन्द्राऽयाहि सहस्त्रयुक् अग्निर्विभ्राष्टिवसनः**
**वायुः श्वेतसिकद्रुकः संवत्सरो विषूवर्णैः**
**नित्यास्तेऽनुचरास्तव सुब्रह्मण्यों सुब्रह्मण्यों सुब्रह्मण्योम्**

*நிஷக்வைரஸமாயுதை:, காலைர்ஹரித்வமாபந்நை:*
*இந்த்ராயாஹிஸஹஸ்ரயுக் அக்னிர்விப்ராஷ்டிவஸன:,*
*வாயுச்வேதஸிகத்ருக: ஸம்வத்ஸரோவிஷூவர்ணை:,*
*நித்யாஸ்தே அநுசராஸ்தவ ஸுப்ரஹ்மண்யோகும்*
*ஸுப்ரஹ்மண்யோகும் ஸுப்ரஹ்மண்யோம்*

என்று வேதங்கள் முருகனைப்பற்றிப் புகழ்கின்றன. முருகனைப் பற்றி புகழாத புராணங்களில்லை. முருகனைப் புகழாத கவிகள் இல்லை. பரமஇதிஹாஸமாகிய பாரதமும் ராமாயணமும் முருகனது புகழை விசேஷமாக கூறுகின்றன.

51. **आर्तसंरक्षणाय नमः** ஆர்தஸம்ரக்ஷணாய நம:
வியாதிகள் முதலியவைகளால் பீடிக்கப்பட்டவர்களை அவைகளிலிருந்து காப்பாற்றுபவருக்கு நமஸ்காரம்.

52. **आद्याय नमः** ஆத்யாய நம:
எல்லாவற்றிற்கும் முதலாய் இருப்பவற்கு நமஸ்காரம்.

53. **आनन्दाय नमः** ஆனந்தாய நம:
(எப்பொழுதும்) ஸந்தோஷமாய் இருப்பவருக்கு நமஸ்கரரம். ஸந்தோஷம் = களிப்பு.

பகவான் ஆனந்தவடிவாய் உள்ளவர் என்று உபநிடதங்கள் கூறுகின்றன.

54. **आर्यसेविताय नमः** *ஆர்யஸேவிதாய நம:*

பூஜிக்கத் தகுந்தவர்களாலும் பூஜிக்கத் தகுந்தவருக்கு நமஸ்காரம்.

55. **आश्रितेष्टार्थवरदाय नमः** *ஆச்ரித இஷ்டார்த்த வரதாய நம:*

தன்னை அடைந்தவர்களுக்கு, அவர்கள் இஷ்டப்படி கேட்ட பொருளைக் கொடுப்பவருக்கு நமஸ்காரம்.

56. **आनन्दिने नमः** *ஆனந்திநே நம:*

களிப்பை உடையவருக்கு நமஸ்காரம்; தன்னைப்போல் மற்றவர்களையும் களிப்படையும்படி செய்பவருக்கு நமஸ்காரம் என்று பொருள்.

57. **आर्तफलप्रदाय नमः** *ஆர்தபலப்ரதாய நம:*

"தான் விரும்பிய பொருள் கிடைக்கவில்லையே" என்று ஏங்குபவர்களுக்கு, அவர்கள் மனம் திருப்தி அடையும் வகையில் பலனைக் கொடுப்பவருக்கு நமஸ்காரம்.

58. **आश्चर्यरूपाय नमः** *ஆஸ்சர்யரூபாய நம:*

எல்லோரும் கண்டு ஆச்சரியப்படும்படியான உருவத்தை உடையவருக்கு நமஸ்காரம் (முருகன் அவ்வளவு அதிகமான அழகுள்ளவர் என்று பொருள்)

59. **आनन्दाय नमः** *ஆனந்தாய நம:*

(சுலோகம் 53ஐ பார்த்து அர்த்தம் தெரிந்து கொள்ளவும்)

60. **आपन्नार्तिविनाशनाय नमः** *ஆபன்னார்த்திவிநாச நாய நம:*

தன்னை அடைந்தவர்களுக்கு ஏற்பட்ட துன்பங்களை நாசம் செய்பவருக்கு நமஸ்காரம்.

61. **इभवक्त्रानुजाय नमः** *இபவக்த்ரானுஜாய நம:*

யானை முகமுடைய விநாயகரின் தம்பிக்கு நமஸ்காரம்.

62. इष्टाय नमः இஷ்டாய நம:

எல்லோரும் விரும்பும்படியான முருகனுக்கு நமஸ்காரம்.

63. इभासुरहरात्मजाय नमः இபாஸுரஹராத்மஜாய நம:

யானை வடிவம்கொண்ட கஜாஸுரனை வதம்செய்த சிவ பெருமானின் புதல்வருக்கு நமஸ்காரம்.

64. इतिहासश्रुतिस्तुत्याय नमः இதிஹாஸச்ருதி ஸ்துத்யாய நம:

இதிஹாஸங்களாலும் வேதங்களாலும் துதிக்கத் தகுந்தவருக்கு நமஸ்காரம்.

65. इन्द्रभोगफलप्रदाय नमः இந்த்ரபோகபலப்ர தாய நம:

சொர்க்கலோகத்தில் இந்திரன் அனுபவிக்கக் கூடிய திவ்ய போகங்களை தன்னை பூஜிக்கும் பக்தர்களுக்கு அளிப்பவருக்கு நமஸ்காரம்.

66. इष्टापूर्तफलप्रदाय नमः இஷ்டாபூர்த்தபலப்ர தாய நம:

யாகம் செய்து அதன்மூலம் கிடைக்கக் கூடிய பலத்தையும்; கிணறு, குளம், நந்தவனம், தண்ணீர்ப்பந்தல் முதலியவைகளை அமைத்துப் பரிபாலனம் செய்வதால் உண்டான பயனையும் (பக்தர்களுக்கு) அளிப்பவருக்கு நமஸ்காரம்.

67. इष्टेष्टवरदायकाय नमः இஷ்டேஷ்டவரதாயகாய நம:

தனக்கு இஷ்டமானவர்களுக்கு (தன் பக்தர்களுக்கு) இஷ்டமான வரத்தைக் கொடுப்பவருக்கு நமஸ்காரம்.

68. इहाऽमुत्रेष्टफलदाय नमः இஹாமுத்ரேஷ்டபல தாய நம:

பக்தர்களுக்கு, இக பர சுகங்கள் இரண்டையும் அளிக்கும் முருகனுக்கு நமஸ்காரம்.

69. **इष्टदाय नमः** *இஷ்டதாய நம:*

பக்தர்களின் விருப்பப்படி விரும்பிய பொருளைக் கொடுப்பவருக்கு நமஸ்காரம்.

70. **इन्द्रवन्दिताय नमः** *இந்த்ரவந்திதாய நம:*

இந்திரனால் நமஸ்கரிக்கப்பட்டவருக்கு நமஸ்காரம்.

71. **ईडनीयाय नमः** *ஈடநீயாய நம:*

யாவராலும் துதிக்கத் தகுந்தவருக்கு நமஸ்காரம்.

72. **ईशपुत्राय नमः** *ஈசபுத்ராய நம:*

பரமசிவனது மைந்தனுக்கு நமஸ்காரம்.

73. **ईप्सितार्थप्रदायकाय नमः** *ஈப்ஸிதார்தப்ர தாயகாய நம:*

மிகவும் விரும்பி ஆசைப்பட்ட பொருளை (பக்தருக்கு) அளிப்பவருக்கு நமஸ்காரம்.

74. **ईतिभीतिहराय नमः** *ஈதிபீதிஹராய நம:*

தனக்கும் தன் வ்யவஸாயத்துக்கு ப்ரதிகூலமாய் ஏற்படும் ஆறுவித இன்னல்களையும் நீக்குபவருக்கு நமஸ்காரம்.

**अतिवृष्टिरनावृष्टिः शलभाः मूषिका शुकाः।**
**अत्यासन्नाश्चराजानः इत्येताईतयः स्मृताः॥**

*அதிவ்ருஷ்டிரநாவ்ருஷ்டி: சலபா: மூஷிகா: சுகா: |*
*அத்யாஸந்நாஸ்சராஜாந: இத்யேதாஈதய: ஸ்ம்ருதா: ||*

அதிக மழை, மழை இல்லாமை, வெட்டுப்பூச்சிகள், கிளிகள், அரசன் அல்லது அரசாங்க அதிகாரிகள் அருகில் விஜயம் செய்வது ஆகிய இவைகள் ஈதிபாதை எனப்படும்.

75. **ईड्याय नमः** *ஈட்யாய நம:*

துதிக்கத் தகுந்தவருக்கு நமஸ்காரம்.

76. ईषणात्रयवर्जिताय नमः ஈஷணாத்ரயவர்ஜிதாயநம:

பொன்னுசை, பெண்ணுசை, பொருளாசை ஆகிய மூன்று ஆசைகளினுலும் பாதிக்கப்படாதவருக்கு நமஸ்காரம்.

77. उदारकीर्तये नमः உதாரகீர்த்தயே நம:

சிறந்த (எல்லோராலும் கொண்டாடக் கூடிய) புகழை உடையவருக்கு நமஸ்காரம்.

78. उद्योगिने नमः உத்யோகினே நம:

முயற்சியுடையவருக்கு நமஸ்காரம்,

79. उत्कृष्टोरुपराक्रमाय नमः உத்க்ருஷ்டோருபராக்ரமாய நம:

உயர்ந்த அதிகமான பலத்தையுமுடையவருக்கு நமஸ்காரம், தன்னிடம் வந்த சத்ருக்களை ஜயிக்கும் திறமைக்குப் பராக்ரமம் என்று பெயர்.

80. उत्कृष्टशक्तये नमः உத்க்ருஷ்டசக்தயே நம:

மிகுந்த (மேன்மை பொருந்திய) திறமை உடையவருக்கு நமஸ்காரம்.

81. उत्साहाय नमः உத்ஸாஹாய நம:

எப்போதும் ( துக்கமற்ற ) ஸந்தோஷமுடையவருக்கு நமஸ்காரம்.

82. उदाराय नमः உதாராய நம:

யாவரும் மதிக்கத்தகுந்த மேன்மை பொருந்திய கௌரவத்தை யுடையவருக்கு நமஸ்காரம்.

83. उत्सवप्रियाय नमः உத்ஸவப்ரியாய நம:

ஸந்தோஷத்தை உண்டுபண்ணக்கூடிய திருநாளை (உத்ஸவத்தை) விரும்புபவருக்கு நமஸ்காரம்.

84. उज्जृम्भाय नमः உஜ்ரும்பாய நம:

ரூபம், சீலம், குணம், வீரம், ஞானம், ஔதார்யம், பலம், தைர்யம், செல்வம் முதலிய ஸகல செல்வங்களும் இருப்பதால்

உத்ஸாகத்துடன் வீரவாதம் பேசும் தன்மை உள்ளவருக்கு நமஸ்காரம்.

85. उद्भवाय नमः उத்பவாய நம:

உயர்ந்த திருவவதாரத்தையுடையவருக்கு நமஸ்காரம்.

86. उग्राय नमः உக்ராய நம:

தேவர்களுக்குள் சிரேஷ்டமானவருக்கு நமஸ்காரம்.

87. उदग्राय नमः உதக்ராய நம:

எல்லோருக்கும் முன்னிலையில் பிரதானமாக இருப்பவரும் தன்னுடைய பக்தர்களை முன்னணியில் இருக்கும்படி செய்பவருமான முருகனுக்கு நமஸ்காரம்.

88. उग्रलोचनाय नमः உக்ரலோசனாய நம:

ச்ரேஷ்டமான (நெற்றியிலமைந்த) கண்ணையுடையவருக்கு நமஸ்காரம். பக்ஷபாதமற்று உலகத்தை நடுநிலையில் வைத்து சமமாகப் பார்ப்பவர் என்பது பொருள்.

89. उन्मत्ताय नमः உன்மத்தாய நம:

பக்தர்களின் ஸந்தோஷத்தைக் கண்டு மிகுதியான மகிழ்ச்சியினால் ஆனந்தபரவசம் கொள்பவருக்கு நமஸ்காரம்.

90. उग्रशमनाय नमः உக்ரசமநாய நம:

குரூரமான குணமுள்ளவர்களை அடக்குபவருக்கு நமஸ்காரம்.

91. उद्वेगघ्नोरगेश्वराय नमः உத்வேகக்னஉரகேச்வராய நம:

சாந்தமான ஸர்ப்பத்தை உடையவருக்கு நமஸ்காரம்.

92. उरुप्रभावाय नमः உருப்ரப்ரபாவாய நம:

மேன்மைகொண்ட மஹிமையுடையவருக்கு நமஸ்காரம்

93. उदीर्णाय नमः உதீர்ணாய நம:

பக்தர்களுக்கு ப்ரத்யக்ஷமாய் காக்ஷியளிப்பவருக்கு நமஸ்காரம்.

94. **उमापुत्राय नमः** *உமாபுத்ராய நம:*

உமையவளின் புத்ரனுக்கு நமஸ்காரம்.

பார்வதி சிவனையே கணவனாக அடைய எண்ணி தவம்செய்யப் புறப்படும்போது அன்னையானவள் "உ, மா", உ = ஹே குழந்தாய்; மா = இது வேண்டாம் என்று கூறினள். அதுமுதல் பார்வதிக்கு "உமா!" என்று பெயர் வழங்கலாயிற்று என்று கந்தபுராணம் கூறுகிறது.

காளிதாஸனும் "உமேதி மாத்ரா தபஸோ நிஷித்தா; பஸ்சாத் உமாக்யாம் ஸுமுகீ ஜகாம" என்று குமாரஸம்பவ காவியத்தில் கூறியுள்ளான்.

95. **उदारधिये नमः** *உதாரதியே நம:*

பெரும் புகழ்படைத்த புத்தியை உடையவருக்கு நமஸ்காரம் (கொடுக்கவேண்டும் என்ற எண்ணமுள்ளவர்).

96. **ऊर्ध्वरेतस्सुताय नमः** *ஊர்த்வரேதஸ்ஸுதாய நம:*

நழுவாத இந்திரியத்தையுடைய சிவனது பிள்ளையாகிய முருகனுக்கு நமஸ்காரம்.

97. **ऊर्ध्वगतिदाय नमः** *ஊர்த்வகதிதாய நம:*

உயர்ந்த ஸ்தானத்தை அளிப்பவருக்கு நமஸ்காரம்.

98. **ऊर्जपालकाय नमः** *ஊர்ஜபாலகாய நம:*

அன்னத்தை (உணவுப்பொருளை)க் காப்பாற்றுபவருக்கு (விருத்தி செய்பவருக்கு) நமஸ்காரம்.

"**अन्नं बहुकुर्वीत**" *"அன்னம் பஹுகுர்வீத"*

என்ற வேதவாக்யத்தின் கருத்தை இங்கே விளக்கியுள்ளார்.

99. **ऊर्जिताय नमः** *ஊர்ஜிதாய நம:*

ஸ்திரமாய் இருப்பவருக்கு நமஸ்காரம்.

100. **ऊर्ध्वगाय नमः** *ஊர்த்வகாய நம:*

மேல்நோக்கிச் செல்பவருக்கு நமஸ்காரம்.

பக்தர்களை முன்னேறும்படி செய்பவர் என்றும் பொருள் படும். (உயர்ந்திருப்பவன் என்றும் பொருள்படும்).

101. ऊर्ध्वगाय नमः *ஊர்த்வாய நம:*
ச்ரேஷ்டமாய் இருப்பவருக்கு நமஸ்காரம்.

102. ऊर्ध्वलोकैकनायकाय नमः *ஊர்த்வலோகைக-நாயகாய நம:*

சொர்க்கம் முதலிய உயர்ந்த (மேலான) இடங்களின் தலைவருக்கு நமஸ்காரம்.

103. ऊर्जवते नमः *ஊர்ஜவதே நம:*
(மிகுதியான) பலமுள்ளவருக்கு நமஸ்காரம்.

104. ऊर्जितोदाराय नमः *ஊர்ஜிதோதாராய நம:*
நிலையான தியாக குணமுள்ளவருக்கு நமஸ்காரம்.

105. ऊर्जितोर्जितशासनाय नमः *ஊர்ஜிதோர்ஜித சாஸநாய நம:*

யாவராலும் மீறமுடியாத நிலையான ஆக்ஞையை உடையவருக்கு நமஸ்காரம்.

106. ऋषिदेवगणस्तुत्याय नमः *ரிஷிதேவகணஸ்துத்யாய நம:*

முனிகணங்களாலும் தேவகணங்களாலும் துதிக்கப் பட்டவருக்கு நமஸ்காரம்.

107. ऋणत्रयविमोचनाय नमः *ருணத்ரயவிமோசனாய நம:*

(தன் பக்தர்களை) தேவர்களின் கடன், பித்ருக்களின் கடன் முனிவர்களின் கடன் ஆகிய இந்த மூன்று கடன்களிலிருந்து விடுவிக்கின்றவருக்கு நமஸ்காரம். பிறக்கும்பொழுதே ஒவ்வொருவனும் இந்த மூன்று கடன்களுடன் பிறக்கிறான். பிறகு யாகம் செய்வதால் தேவர்களின் கடனையும், புத்ரர்களை அடைவதால் பித்ருகளின் கடனையும், ப்ரம்மசரியத்தினால் ரிஷிகளின் கடனையும் தீர்த்துக்கொள்ளுகிறான் என்று வேதம் கூறுகிறது. முருகன் அருளால் இம்மூன்று கடன்களும் எளிதில் தீர்ந்து விடுகின்றன. யாக பலன், ப்ரம்மசர்ய பலன், புத்ர லாபம் இம் மூன்றும் முருக பக்தர்களுக்கு ஸுலபமானது.

108. **ऋजुरूपाय नमः** *ருஜு௱ரூபாய நம:*

குறைவற்ற சுத்தமான உருவம் உள்ளவருக்கு நமஸ்காரம்

109. **ऋजुकराय नमः** *ருஜு௱கராய நம:*

முறைப்படி செய்பவருக்கு நமஸ்காரம். (அழகிய நேர்மை யான கைகளை யுடையவர் என்றும் பொருள்படும்).

110. **ऋजुमार्गप्रदर्शनाय नमः** *ருஜு௱மார்கப்ரதர்சனாய நம:*

நல்வழியைக் காட்டுபவருக்கு நமஸ்காரம்.

111. **ऋतंभराय नमः** *ருதம்பராய நம:*

ஸத்யத்தைத் தாங்குபவருக்கு நமஸ்காரம்.

112. **ऋजुप्रीताय नमः** *ருஜு௱ப்ரீதாய நம:*

நேர்மையாக நடந்துகொள்ளுபவரிடம் அன்புடன் இருப் பவருக்கு நமஸ்காரம்.

113. **ऋषभाय नमः** *ருஷபாய நம:*

ச்ரேஷ்டமானவருக்கு நமஸ்காரம்.

114. **ऋद्धिदाय नमः** *ருத்திதாய நம:*

வேண்டிய அளவு கொடுப்பவருக்கு நமஸ்காரம்.

115. **ऋताय नमः** *ருதாய நம:*

ஸத்யமான ஸ்வபாவமுள்ளவருக்கு (கர்மபலனை இருப்ப வருக்கு) நமஸ்காரம்.

116. **लुलितोद्धारकाय नमः** *லுளிதோத்தாரகாய நம:*

துக்கத்தினால் கலங்கியவர்களை கை தூக்கி விடுபவருக்கு நமஸ்காரம்.

117. **लूतभवपाशप्रभंजनाय नमः** *லூதபவபாச ப்ரபஞ்சனாய நம:*

சிலந்திப்பூச்சிக் கூட்டை அழிப்பதுபோல அவ்வளவு லகுவாக இந்த ஸம்ஸார பந்தத்தை அறுத்துவிடுபவருக்கு நமஸ்காரம்.

118. **एणांकधरसत्पुत्राय नमः** ஏணாங்கதரஸத்புத்ராய நம:

சந்திரசேகரனாகிய சிவபெருமானது நன் மகனுக்கு நமஸ்காரம்.

119. **एकस्मै नमः** ஏகஸ்மை நம:

ஒரு தனிப்பட்ட பெருமை வாய்ந்த அம்முருகனுக்கு நமஸ்காரம்.

120. **एनोविनाशनाय नमः** ஏனோவிநாசனாய நம:

(பக்தர்களுடைய) பாபத்தைப் போக்கடிப்பவனுக்கு நமஸ்காரம்.

121. **ऐश्वर्यदाय नमः** ஐச்வர்யதாய நம:

செல்வத்தைக் கொடுப்பவருக்கு நமஸ்காரம்.

122. **ऐन्द्रभोगिने नमः** ஐந்த்ரபோகினே நம:

இந்திரபோகத்தை உடையவருக்கு நமஸ்காரம்.

123. **ऐतिह्याय नमः** ஐதிஹ்யாய நம:

உபமானமாக எடுத்துக்காட்டும் தன்மையருக்கு நமஸ்காரம்.

124. **ऐन्द्रवन्दिताय नमः** ஐந்த்ரவந்திதாய நம:

இந்திரன், இந்திரனைச் சேர்ந்தவர்கள் இவர்களுடைய வந்தனையை உடையவருக்கு நமஸ்காரம்.

125. **ओजस्विने नमः** ஓஜஸ்வினே நம:

சத்ருவைத் தாக்கக் கூடிய பலமுள்ளவருக்கு நமஸ்காரம்.

126. **ओषधिस्थानाय नमः** ஓஷதிஸ்தானாய நம:

மூலிகைகளுடைய இருப்பிடமானவருக்கு நமஸ்காரம்.

127. **ओजोदाय नमः** ஓஜோதாய நம:

பலத்தைக் கொடுப்பவருக்கு நமஸ்காரம்.

**528. पुरुषाय नमः** *புருஷாய நம:*

ஆணுருப்பெற்றவருக்கு வ - ம்

ஒவ்வொரு மனிதர்களுடைய ஹ்ருதய கமலத்தை புரி என்று சொல்வது நூல்களின் மரபு. அதில் முருகன் இருப்பதால் புருஷன் என்று கூறப்படுகிறது. புரு என்றால் பாபம் என்று பொருள், பாபத்தை எரித்துவிடுவதால் புருஷன் என்றும் சொல்லலாம். (அந்தர்யாமியாகிய பரம்பொருளே முருகன் என்பது உள்ளுரை. ஆகவேதான் முருகனுக்கு "குஹன்" என்று விசேஷப்பெயர் விளங்குகிறது.)

**529. प्राणाय नमः** *ப்ராணாய நம:*

ப்ராணவாயுவாய் இருப்பவருக்கு வ - ம்.

வாயுவைப் பார்த்து நீ தான் ப்ரும்மம், உனக்கு வணக்கம். நீ தான் ப்ரத்யக்ஷ ப்ரும்மம்; என்று பொருள்பட "நமோ ப்ரம்ஹணே", நமஸ்தே வாயோ; த்வமேவ ப்ரத்யக்ஷம் ப்ரம் மாஸி" என்று தைத்திரீய உபநிஷத்துக் கூறுகிறது.

**530. प्रभवाय नमः** *ப்ரபவாய நம:*

எப்பொருளும் தோன்றுகிற மூலகாரணமாய் இருப்பவ் ருக்கு வ - ம்.

**531. पुरुषोत्तमाय नमः** *புருஷோத்தமாய நம:*

புருஷர்களுக்குள் ச்ரேஷ்டராய் இருப்பவருக்கு வ - ம். (விஷ்ணுவாய் இருப்பவர் என்றும் பொருள், ஆகவேதான் கீதையில் கண்ணபிரான் "ஸேனானீனும் அஹம் ஸ்கந்த:" சேனாபதிகளுக்குள் தான் கந்தனாய் இருக்கிறேன் என்று கூறி யுள்ளார்.)

**532. प्रसन्नाय नमः** *ப்ரஸன்னாய நம:*

ஸந்தோஷமாய் இருப்பவருக்கு வ - ம்.

**533. परमस्पष्टाय नमः** *பரமஸ்பஷ்டாய நம:*

பக்தர்களுக்கு மிகவும் வ்யக்தமாய் இருப்பவருக்கு (பக்தி யில்லாதவருக்கு அவ்யக்தமாயிருப்பவருக்கு) வ - ம்.

**534. पराय नमः** *பராய நம:*

மேன்மை தங்கியவருக்கு வ - ம்.

535. **परिबृडाय नमः** *பரிப்ருடாய நம:*
(தேவசேனையின்) தலைவனுக்கு வ - ம்.

536. **पराय नमः** *பராய நம:*
எல்லோரையும்விட உயர்ந்தவருக்கு வ - ம்.

537. **परमात्मने नमः** *பரமாத்மனே நம:*
ஜீவனைக் காட்டிலும் தனியான ஈசுவரனுக்கு வ - ம். ஜீவாத்மா, பரமாத்மா என்று ஆத்மா இரண்டுவிதம்.

538. **परब्रह्मणे नमः** *பரப்ரம்ஹணே நம:*
பரம்பொருளாய் இருப்பவருக்கு வ - ம்.

539. **परार्थाय नमः** *பரார்த்தாய நம:*
பிறருடைய காரியத்தை நிறைவேற்றுவதற்காகவே அமைந்தவருக்கு வ - ம்.

540. **प्रियदर्शनाय नमः** *ப்ரியதர்சனாய நம:*
எவரையும் அன்போடு பார்ப்பவரும், யாவராலும் அன்போடு பார்க்கத்தகுந்தவருமான முருகனுக்கு வ - ம்.

541. **पवित्राय नमः** *பவித்ராய நம:*
பரிசுத்தமாய் இருப்பவருக்கு வ - ம்.

542. **पुष्टिदाय नमः** *புஷ்டிதாய நம:*
பலத்தைக் கொடுப்பவருக்கு வ - ம்.

543. **पूर्तये नमः** *பூர்தயே நம:*
நிறைந்திருப்பவருக்கு வ - ம். (குளம் கிணறு நந்தவனம் முதலியது ஏற்படுத்தியதால் உண்டாகும் பயனாயும் இருப்பவர் என்றும் பொருள்)

544. **पिंगलाय नमः** *பிங்களாய நம:*
பொன்போன்ற மேனியுடையவருக்கு வ - ம்.

545. पुष्टिवर्धनाय नमः புஷ்டிவர்தனாய நம:
பலத்தை வளர்ப்பவருக்கு வ - ம்.

546. पापहारिणे नमः பாபஹாரிணே நம:
பாபத்தைப் போக்கடிப்பவருக்கு வ - ம்.

547. पाशधराय नमः பாசதராய நம:
பாசம் என்ற ஆயுதத்தை (கயிற்றை) கையில் வைத்திருப்பவருக்கு வ - ம்.

548. प्रमत्तासुरशिक्षकाय नमः ப்ரமத்தாஸுரசிக்ஷகாய நம:
கர்வம் கொண்ட அஸுரர்களைத் தண்டிப்பவருக்கு வ - ம்.

549. पावनाय नमः பாவனாய நம:
பரிசுத்தராய் இருப்பவருக்கு வ - ம்.

550. पावकाय नमः பாவகாய நம:
அக்னி (நெருப்பு) வடிவாய் இருப்பவருக்கு வ - ம்.

551. पूज्याय नमः பூஜ்யாய நம:
யாவராலும் பூஜை செய்யத் தகுந்தவருக்கு வ - ம்.

552. पूर्णानन्दाय नमः பூர்ணனந்தாய நம:
நிறைந்த ஆனந்தத்தை உடையவருக்கு வ - ம்.

553. परात्पराय नमः பராத்பராய நம:
உயர்ந்தவரைக் காட்டிலும் உயர்ந்தவருக்கு வ - ம்.
(மிகவும் ச்ரேஷ்டமானவர் என்பது பொருள்)

554. पुष्कलाय नमः புஷ்கலாய நம:
கலைகளால் நிறைந்தவருக்கு வ - ம்.

"ஷோடச சகல: புருஷ:" என்று வேத புராணங்கள் கூறுகின்றன. இக்கருத்தை இந்த நாமாவினால் விளக்குகிறார்.

555. **प्रवराय नमः** *ப்ரவராய நம:*

*மிகமிக சிரேஷ்டமானவருக்கு வ - ம்.*

556. **पूर्वाय नमः** *பூர்வாய நம:*

எதற்கும் முன்பே காரணப் பொருளாய் நின்றவருக்கு வ - ம்.

557. **पितृभक्ताय नमः** *பித்ருபக்தாய நம:*

தகப்பனுரான சிவபெருமானிடத்தில் பக்தி உள்ளவருக்கு வ - ம்.

558. **पुरोगमाय नमः** *புரோகமாய நம:*

முன்ஞல் செல்பவருக்கு (முன்ஞல் செல்லும்படி செய்பவருக்கு) வ - ம்.

559. **प्राणदाय नमः** *ப்ராணதாய நம:*

ப்ராணனை அளிப்பவருக்கு (பக்தர்களுக்கு நீண்ட ஆயுளை அளிப்பவருக்கு) வ - ம்.

560. **प्राणिजनकाय नमः** *ப்ராணிஜனகாய நம:*

ஜீவராசிகளை ஸ்ருஷ்டிப்பவருக்கு வ - ம்.

561. **प्रतिष्ठाय नमः** *ப்ரதிஷ்டாய நம:*

ஜனங்களின் பாக்யவசத்தால் ஆவிர்பவித்தவருக்கு வ - ம்.

562. **पावकोद्भवाय नमः** *பாவகோத்பவாய நம:*

நெருப்பினின்றும் தோன்றியவருக்கு வ - ம்.

563. **परब्रह्मस्वरूपाय नमः** *பரப்ரம்ஹஸ்வரூபாய நம:*

எல்லாவற்றிற்கும் மேற்பட்ட கடவுளாய் இருப்பவருக்கு வ - ம். ("ப்ரம்ஹ" என்ற சொல்லுக்கு வளரும்படி செய்வது என்று பொருள். ஒவ்வொரு ப்ராணியையும் கடவுள் ஸ்ருஷ்டித்து அதனுள்தானே இருந்து வளர்க்கின்ருர், கடவுளால் ஸ்ருஷ்டிக்கப்படும் ஜீவராசிகள் வளர்கின்றன, பிறந்த குழந்தைகள் நாளுக்குநாள் வளர்வதைப் பார்க்கிறேம்; பசு முதலிய

ப்ராணிகளும் இவ்வாறே, மரஞ் செடி கொடிகளும் அவைகளின் பூ, காய், முதலியவைகளும் வளருகின்றன ; ஆனால் கடவுளால் ஸ்ருஷ்டிக்கப்படாத நம்மால் செய்யப்பட்ட பொருள்கள் அனைத்தும் அப்படியே இருக்குமே தவிற வளருவதில்லை.

**564. परमैश्वर्यकारणाय नमः** *பரமைச்வர்யகாரணாய நம:*

அழியாது செல்வம் தழைத்தோங்க காரணமாய் இருப்பவருக்கு வ - ம்.

**565. परार्धिताय नमः** *பரர்திதாய நம:*

பிறருக்கு நிறைய செல்வத்தை அளிப்பவருக்கு வ - ம்.

**566. पुष्टिकराय नमः** *புஷ்டிகராய நம:*

பலசாலிகளாய் இருக்கும்படி செய்பவருக்கு வ - ம்.

**567. प्रकाशात्मने नमः** *ப்ரகாசாத்மனே நம:*

மிகுதியான ஒளிவடிவமான ஆத்மாவை உடையவருக்கு வ - ம்.

**568. प्रतापवते नमः** *ப்ரதாபவதே நம:*

மிகுந்த பராக்ரமமுள்ளவருக்கு வ - ம்.

**569. प्रज्ञापराय नमः** *ப்ரஞ்ஞாபராய நம:*

விசேஷமான அறிவுள்ளவருக்கு வ - ம்.

**570. प्रकृष्टार्थाय नमः** *ப்ரக்ருஷ்டார்த்தாய நம:*

உயர்ந்த பொருளாய் இருப்பருக்கு வ - ம். எப்படி கீதையில் 9-10 அத்யாயங்களில் பகவத் விபூதியை கூறியிருக்கிறதோ நான்தான் சிவன், நான்தான் ப்ரம்மா, நானே ராமன் நானே எல்லாம் என்று கூறுவதுபோல் இங்கு இந்த நாமாவினால் சுருக்கமாகக் கூறுகிறார்.

**571. प्रथवे नमः** *ப்ரதவே நம:*

பெரிய வடிவமுள்ளவருக்கு வ - ம்.

572. प्रथुपराक्रमाय नमः ப்ரதுபராக்ரமாய நம:
அதிக பலம் உள்ளவருக்கு வ - ம்.

573. फणीश्वराय नमः பணீச்வராய நம:
ஸர்ப்ப ராஜனாய் இருப்பவருக்கு வ - ம்.

574. फणिवराय नमः பணிவராய நம:
ஸர்ப்ப ச்ரேஷ்டராய் இருப்பவருக்கு வ - ம்.

575. फणामणिविभूषणाय नमः பணாமணி விபூஷணாய நம:
நாகரத்னத்தை அணிந்திருப்பவருக்கு வ - ம்.

576. फलदाय नमः பலதாய நம:
அவரவர்களின் புண்ய பாப காரியத்துக்கு உகந்தாற்போல் சுபா அசுப பலனை அளிப்பவருக்கு வ - ம்.

577. फलहस्ताय नमः பல ஹஸ்தாய நம:
பழத்தைக் கையில் வைத்திருப்பவருக்கு வ - ம்.

578. फुल्लांबुजविलोचनाय नमः புல்லாம்புஜவிலோசனாய நம:
மலர்ந்த தாமரைபோன்ற கண்களையுடையவருக்கு வ - ம்.

579. फडुच्चाटितपापौघाय नमः படுச்சாடிதபாபௌகாய நம:
"பட்" என்ற சப்தத்தினால் போக்கடிக்கப்பட்ட பாபத்தை உடையவருக்கு வ - ம்.

580. फणिलोकविभूषणाय नमः பணிலோகவிபூஷணாய நம:
ஸர்ப்பங்களுக்கு அலங்காரமாய் இருப்பவருக்கு வ - ம்.

581. बाहुलेयाय नमः பாஹுலேயாய நம:

அதிகமான எண்ணிக்கையுடைய கிருத்திகையின் புதல் வருக்கு வ - ம்.

582. बृहद्रूपाय नमः ப்ருஹத்ரூபாய நம:

பெரிய உருவத்தை உடையவருக்கு வ - ம்.

583 बलिष्ठाय नमः பலிஷ்டாய நம:

எல்லோருக்கும் மேலான மிகவும் பலசாலியாய் இருப்ப வருக்கு வ - ம்.

584. बलवते नमः பலவதே நம:

(மிகுந்த) பலமுள்ளவருக்கு வ - ம்.

585. बलिने नमः பலினே நம:

மிகுந்த (பலமுள்ளவருக்கு வ - ம்.)

586. ब्रह्मेशविष्णुरूपाय नमः ப்ரம்மேசவிஷ்ணுரூபாய நம:

நான்முகன், திருமால், சிவன் இம்மூவர்களின் வடிவாய் இருப்பவருக்கு வ - ம்.

587. बुधाय नमः புத்தாய நம:

அறிவுடையவருக்கு வ - ம்.

588. बुद्धिमतांवराय नमः புத்திமதாம்வராய நம:

புத்திமான்களுக்குள் ச்ரேஷ்டமானருக்கு வ - ம்.

589. बालरूपाय नमः பாலரூபாய நம:

எப்பொழுதும் இளமைப் பருவமுடையவருக்கு வ - ம். முருகனை த்யானிப்பவர்கள் கௌமாரப் பருவம் உள்ளவராக அதாவது "குமரன்" என்று த்யானிப்பது நல்லது. இதுதான் முருகனுக்கு ப்ரீதி அளிக்கக்கூடியது. "மலைக்கிழவோனே" என்று பாடிய நக்கீரர் குமாரனது அருள்பெற முடியாமல்

என்றும் இளையாய்" என்று பாடி அருள் பெற்றார். முருகனது தகப்பனாராகிய சிவபெருமானை விருத்தாசலத்தில் சுந்திர மூர்த்தி நாயனார், கிழவன் என்று சொல்லியதால் சிவபெருமான் கொடுத்த பொன் கட்டிகளை நடுவழியில் முருகன் அபகரித்து விட்டார். எனவே ஆதிசங்கரரும் முருகனை ஸுப்ரஹ்மண்ய புஜங்க ஸ்தோத்ரத்தில் குறிப்பிடுகிறார்.

590. **ब्रह्मगर्भाय नमः** ப்ரஹ்மகர்பாய நம:
**வேதங்களைத் தன் உதரத்தில் வைத்திருப்பவருக்கு வ - ம்.**

591. **ब्रह्मचारिणे नमः** ப்ரம்மசாரிணே நம:
ப்ரும்மசரிய நிலையில் உள்ளவருக்கு வ - ம்.

592. **बुधप्रियाय नमः** புதப்ரியாய நம:
வித்வான்களிடத்தில் அன்புள்ளவருக்கு வ - ம்.

593. **बहुश्रुताय नमः** பஹுச்ருதாய நம:
யாவராலும் கேட்டுத் தெரிந்து கொள்ளப்பட்டவருக்கு வ - ம்.

594. **बहुमताय नमः** பஹுமதாய நம:
யாவருக்கும் இஷ்டமாய் இருப்பவருக்கு வ - ம்.

595. **ब्रह्मण्याय नमः** ப்ரஹ்மண்யாய நம:
வேதப் பொருளாய் விளங்குபவருக்கு வ - ம்.

596. **ब्राह्मणप्रियाय नमः** ப்ராஹ்மணப்ரியாய நம:
ப்ராம்மணர்களிடம் அன்புடையவருக்கு வ - ம்.

597. **बलप्रमथनाय नमः** பலப்ரமதனாய நம:
(துஷ்டர்களின்) பலத்தை அழிப்பவருக்கு வ - ம்.

598. **ब्रह्मणे नमः** ப்ரஹ்மணே நம:
ப்ரம்மமாய் இருப்பவருக்கு வ - ம்.

599. बहुरूपाद नमः பஹுரூபாய நம:
அநேக உருவாய் அமைந்திருப்பவருக்கு வ - ம்.

600. बहुप्रदाय नमः பஹுப்ரதாய நம:
(பக்தர்களுக்கு) அதிகமாகக் கொடுப்பவருக்கு வ - ம்.

601. बृहत्भानुतनूत्भूताय नमः ப்ருஹத்பாநுதநூத்பூதாய நம:
அக்னியிலிருந்து உண்டானவருக்கு வ - ம்.

602. बृहत्सेनाय नमः ப்ருஹத்ஸேனாய நம:
பெரிய தேவசேனையை உடையவருக்கு வ - ம்.

603. बिलेशयाय नमः பிலேசயாய நம:
பொந்தில் இருப்பவருக்கு வ - ம். (புற்றில் பாம்பின் உருக் கொண்டு)

604. बहुबाहवे नमः பஹுபாஹவே நம:
அநேக கைகளை உடையவருக்கு வ - ம்.

605. बलश्रीमते नमः பலச்ரீமதே நம:
பலங்கொண்ட செல்வத்தை உடையவருக்கு வ - ம், (சக்தி வாய்ந்த வேதத்தை உடையவர் என்றும் பொருள்)

606. बहुदैत्यविनाशकाय नमः பஹுதைத்யவிநாசகாய நம:
அதிக அஸுரர்களை அழித்தவருக்கு வ - ம்.

607. बिलद्वारान्तरालस्थाय नमः பிலத்வாராந்தராலஸ்தாய நம:
பொந்தின் வாயினது நடுவில் இருப்பவருக்கு (பாம்பின் உருவம் கொண்டு) வ - ம்.

608. बृहच्छक्तिधनुर्धराय नमः ப்ருஹச்சக்திதநுர்தராய நம:
அதிக பலங்கொண்ட வில்லை உடையவருக்கு வ - ம்.

609. बालार्कद्युतिमते नमः பாலார்கத்யுதிமதே நம:
இளம் ஸூர்யன்போன்ற தேக காந்தி உடையவருக்கு வ - ம்.

610. बालाय नमः பாலாய நம:
குழந்தையாய் இருப்பவருக்கு வ - ம்.

611. बृहद्वक्षसे नमः ப்ருஹத்வக்ஷஸே நம:
பெரிய மார்பை உடையவருக்கு வ - ம்.

612. बृहद्धनुषे नमः ப்ருஹத்தநுஷே நம:
பெரிய வில்லை உடையவருக்கு வ - ம்.

613. भव्याय नमः பவ்யாய நம:
(எப்பொழுதும்) இருப்பவருக்கு வ - ம்.

614. भोगीश्वराय नमः போகீச்வராய நம:
ஸர்ப ராஜனாயிருப்பவருக்கு வ - ம்.

615. भाव्याय नमः பாவ்யாய நம:
(யாவரையும்) இருக்கும்படிச் செய்பவருக்கு வ - ம்.

616. भवनाशाय नमः பவநாசாய நம:
ஸம்ஸார பந்தத்தை அழிப்பவருக்கு வ - ம்.

617. भवप्रियाय नमः பவப்ரியாய நம:
சிவன்பால் அன்புடையவருக்கு வ - ம்.

618. भक्तिगम्याय नमः பக்திகம்யாய நம:
பக்தியினால் அடையத் தகுந்தவருக்கு வ - ம்.

619. भयहराय नमः பயஹராய நம:
(யாவருக்கும் ஏற்படக்கூடிய) பயத்தைப் போக்கடிப்பவருக்கு வ - ம்.

620. **भावज्ञाय नमः** பாவஞ்ஞாய நம:
தத்துவத்தை அறிந்தவருக்கு வ - ம்.

621. **भक्तसुप्रियाय नमः** பக்தஸுப்ரியாய நம:
(தன்) பக்தர்களிடம் அன்புடையவருக்கு வ - ம்.

622. **भुक्तिमुक्तिप्रदाय नमः** புக்திமுக்திப்ரதாய நம:
போகம் மோக்ஷம் இவ்விரண்டையும் அளிப்பவருக்கு வ - ம்.

623. **भोगिने नमः** போகினே நம:
திவ்ய போகத்தை (ஸுகத்தை) அனுபவிப்பவருக்கு வ - ம்.

624. **भगवते नमः** பகவதே நம:
வைராக்யம் என்ற இவ்வாறு தனங்களையும் உடையவருக்கு வ - ம்.

625. **भाग्यवर्धनाय नमः** பாக்யவர்தனாய நம:
(இன்பமாய் அனுபவிக்கக்கூடிய ஸகல பதார்த்தங்களையும் அடைந்து ஸுகித்திருப்பது பாக்யம் எனப்படும்) ஸகல பாக்யங்களையும் குறையாமல் மேல்மேலும் பக்தர்களுக்கு வளரும்படிச் செய்பவருக்கு வணக்கம்.

626. **भ्राजिष्णवे नमः** ப்ராஜிஷ்ணவே நம:
விசேஷமாய் ப்ரகாசமுள்ளவருக்கு (ப்ரகாசமுள்ள வெற்றி வீரனுக்கு) வ - ம்.

627. **भावनाय नमः** பாவனாய நம:
எல்லாப் பொருளையும் உண்டுபண்ணுபவருக்கு வ - ம்.

628. **भर्त्रे नमः** பர்த்ரே நம:
யாவரையும் நன்கு போஷிப்பருக்கு வ - ம்.

629. **भीमाय नमः** பீமாய நம:
பயங்கரமான தோற்றமுடையவருக்கு வ - ம்.

630. **भीमपराक्रमाय नमः** பீமபராக்ரமாய நம:

யாவரும் பயப்படும்படியான மிகுந்த பலத்தையுடையவருக்கு வ - ம்.

631. **भूतिदाय नमः** பூதிதாய நம:

செல்வத்தைக் கொடுப்பவருக்கு வ - ம்.

632. **भूतिकृते नमः** பூதிக்ருதே நம:

செல்வம் (நிறைய) உண்டாகும்படி செய்பவருக்கு வ - ம்.

633. **भोक्त्रे नमः** போக்த்ரே நம:

ஸுகமாய் எப்பொருளையும் அனுபவிப்பவருக்கு வ - ம்.

634. **भूतात्मने नमः** பூதாத்மனே நம:

ப்ருதிவி வாயு அப்பு தேஜஸ் ஆகாசம் இந்த ஐந்து மகா பூதங்களிடத்தும் அந்தர்யாமியாய் இருப்பவருக்கு வ - ம்.

635. **भुवनेश्वराय नमः** புவனேச்வராய நம:

எல்லா உலகங்களுக்கும் அதிபதியாய் இருப்பவருக்கு வ - ம்.

636. **भावकाय नमः** பாவகாய நம:

த்யானம் செய்யத் தகுந்தவருக்கு வ - ம். (உலகம் உய்ய உருவமாய் தோற்றம் அளிப்பவருக்கும் என்றும் பொருள்)

637. **भीकराय नमः** பீகராய நம:

(பக்தர்களின் விரோதியை) பயமுருத்துபவருக்கு வ - ம்.

638. **भीष्माय नमः** பீஷ்மாய நம:

பயங்கரமான (நாளது ஒரு பகலில் சூரனை அழித்து விடுகிறேன் என) ப்ரதிஞையை உடையவருக்கு வ - ம்.

639. **भावकेष्टाय नमः** பாவகேஷ்டாய நம:

தன்னை த்யானம் செய்பவர்களிடத்தில் அன்புடையவருக்கு வ - ம்.

640. भवोत्भवाय नमः பவோத்பவாய நம:

பரமேச்வரனிடமிருந்து உண்டானவருக்கு வ - ம்.

641. भवतापप्रशमनाय नमः பவதாபப்ரசமனாய நம:

ஸம்ஸாரத்தினால் உண்டாகும் தாபத்தை நாசம் செய்பவருக்கு வ - ம்.

642. भोगवते नमः போகவதே நம:

ஸுகத்தை அனுபவிப்பவருக்கு வ - ம்.

643. भूतभावनाय नमः பூதபாவநாய நம:

பூதங்களை உண்டுபண்ணுபவருக்கு (பூதங்களால் த்யானம் செய்யத் தகுந்தவருக்கு) வ - ம்.

644. भोज्यप्रदाय नमः போஜ்யப்ரதாய நம:

அனுபவிக்கத் தகுந்த பொருளை அளிப்பவருக்கு வ - ம்.

645. भ्रान्तिनाशनाय नमः ப்ராந்திநாசநாய நம:

ப்ராந்தியான அறிவை (கிளிஞ்சலில் வெள்ளி தோன்றுவது போன்றதை) உண்மை ஞானத்தைக் கொடுத்து நாசம் செய்பவருக்கு வ - ம்.

646. भानुमते नमः பானுமதே நம:

ஸூர்யனையுடையவருக்கு அதாவது (ஸூர்ய மண்டலத்தில் வசிப்பவருக்கு) ஸூர்யனை தன் சரீரமாக உடையவருக்கு வ - ம்.

647. भुवनाश्रयाय नमः புவனாச்ரயாய நம.

உலகங்களுக்கெல்லாம் ஆதாரமாயிருப்பவருக்கு வ - ம்.

648. भूरिभोगप्रदाय नमः பூரிபோகப்ரதாய நம:

அதிகமாக அனுபவிக்கும் பொருளை விசேஷமாகக் கொடுப்பவருக்கு வ - ம்.

649. भद्राय नमः பத்ராய நம:

மங்களகரமாய் இருப்பவருக்கு வ - ம்.

650. **भजनीयाय नमः** *பஜநீயாய நம:*
(யாவராலும்) சேவிக்கத் தகுந்தவருக்கு வ - ம்.

651. **भिषग्वराय नमः** *பிஷக்வராய நம:*
வைத்யர்களுக்குள் ச்ரேஷ்டராய் இருப்பவருக்கு வ - ம்.

652. **महासेनाय नमः** *மஹாஸேனாய நம:*
பெரிய சேனையை உடையவருக்கு வ - ம்.

653. **महोदराय नमः** *மஹோதராய நம:*
பெரிய வயிறு உடையவருக்கு வ - ம். (விராட் புருஷனாய் இருக்கும் காலத்தில் என்று பொருள்.)

654. **महाशक्तये नमः** *மஹாசக்தயே நம:*
பெரிய சக்தியை உடையவருக்கு வ - ம்.

655. **महाद्युतये नमः** *மஹாத்யுதயே நம:*
மிகுதியான காந்தி யுடையவருக்கு வ - ம்.

656. **महाबुद्धये नमः** *மஹாபுத்தயே நம:*
அதிக (நிறைந்த) புத்தி யுடையவருக்கு (நிஸ்சயமான ஞானமுடையவருக்கு) வ - ம்.

657. **महावीर्याय नमः** *மஹாவீர்யாய நம:*
அதிகமான வீர்யம் உடையவருக்கு வ - ம்.

658. **महोत्साहाय नमः** *மஹோத்ஸாஹாய நம:*
அதிக ஸந்தோஷமுள்ளவருக்கு வ - ம்.

659 **महाबलाय नमः** *மஹாபலாய நம:*
அதிக பலமுள்ளவருக்கு வ - ம்.

660. महाभोगिने नमः மஹாபோகினே நம:

பெரிய வடிவமுள்ளவருக்கு வ - ம். (ஆதிசேஷன் வடிவாய் இருப்பவர் என்றும் பொருள்.)

661. महामायिने नमः மஹாமாயினே நம:

மூல காரணமான மாயையை உடையவருக்கு வ - ம்.

662. मेधाविने नमः மேதாவினே நம:

அதிக (உயர்ந்த) நுண்ணறிவை யுடையவருக்கு வ - ம்.

663. मेखलिने नमः மேகலினே நம:

மௌஞ்சி என்ற தர்ப விசேஷத்தினல் செய்யப்பட்ட (அற நாண்கயிறு) கயிற்றை இடுப்பில் அணிந்திருப்பவருக்கு வ - ம்.

664. महते नमः மஹதே நம:

எல்லாவற்றிற்கும் மேலான பெரிய உருவமுள்ளவருக்கு வ - ம்.

665. मुनिस्तुताय नमः முனிஸ்துதாய நம:

முனிவர்களால் துதிக்கப்படுபவருக்கு வ - ம்.

666. महामान्याय नमः மஹாமான்யாய நம:

யாவராலும் கௌரவமாய் பூஜிக்கத் தகுந்தவருக்கு வ - ம்.

667 महानन्दाय नमः மஹானந்தாய நம:

அதிகமான ஆனந்தத்தை உடையவருக்கு வ - ம்.

668. महायशसे नमः மஹாயசஸே நம.

பெரும் புகழுடையவருக்கு வ - ம்.

669. महोर्जिताय नमः மஹோர்ஜிதாய நம:

மேன்மை பொருந்திய த்ருடமான ஸங்கல்பத்தை உடையவருக்கு வ - ம்.

670. मानिधये नमः மானநிதயே நம:

கௌரவத் தன்மைக்கு இருப்பிடமானவருக்கு வ - ம்.

671. मनोरथफलप्रदाय नमः மனோரதபலப்ரதாய நம:

எவரெவர்கள் என்னென்ன பயன் வேண்டுமென்று விரும்புகிறார்களோ அவைகளை யெல்லாம் விசேஷமாகக் கொடுப்பவருக்கு வ - ம்.

672. महोदयाय नमः மஹோதயாய நம:

மேன்மை பொருந்திய தோற்றத்தை உடையவருக்கு வ - ம்.

673. महापुण्याय नमः மஹாபுண்யாய நம:

பெரிய (மேன்மை பொருந்திய) புண்ணியவடிவமாய் இருப்பவருக்கு வ - ம்.

674. महाबलपराक्रमाय नमः மஹாபலபராக்ரமாய நம:

மிகுதியான பலத்தையும் சத்துருக்களை ஆக்ரமிக்கக்கூடிய தன்மையையும் உடையவருக்கு வ - ம்.

675. मानदाय नमः மானதாய நம:

கௌரவத்தை அளிப்பவருக்கு வ - ம்.

676. मतिदाय नमः மதிதாய நம:

புத்தி சக்தியை அளிப்பவருக்கு வ - ம்.

677. मालिने नमः மாலினே நம:

மாலை யணிந்திருப்பவருக்கு வ - ம். (முருகனுக்கு தாமரைப் பூமாலை அணிந்துகொள்வதில் ப்ரீதி அதிகம்.)

उमाकोमलहस्ताब्यसंभावितललाटिकं ।
हिरण्यकुंडलंवन्दे कुमारं पुष्करस्रजं ॥

இது முருகனைப்பற்றிய மஹாமந்த்ரம். இதில் புஷ்கரஸ்ரஜம் என்று கூறியிருக்கிறது. இதைச் சிலர் செங்கழுநீர் புஷ்பம் (கல்ஹாரம்) என்றும் கூறுவர்.

678. मुक्तामालाविभूषणाय नमः முக்தாமாலாவிபூஷணாய நம:

முத்துமாலையை ஆபரணமாக அணிந்திருப்பவருக்கு வ-ம்.

679. मनोहराय नमः மனோஹராய நம:

எல்லோருடைய மனதையும் கவரக்கூடிய குணாதிசயமுள்ளவருக்கு வ-ம்.

680. महामुख्याय नमः மஹாமுக்யாய நம:

பெருந்தன்மைகொண்டு யாவருக்கும் முன்னிலையில் இருப்பவருக்கு வ-ம்.

681. महर्धये नमः மஹர்தயே நம:

நிறைந்த செல்வத்தை யுடையவருக்கு வ-ம்.

682. मूर्तिमते नमः மூர்த்திமதே நம:

சரீரத்தை உடையவருக்கு வ-ம். நிர்குணமாய் நின்ற பரம்பொருள் உலகம் உய்ய ஸகுணமாய் இருக்கிறார். "அருவமும் உருவமாகிப் பலவாய் ஒன்றாய் ப்ரம்மமாய் நின்ற சோதிப் பிழம்பதோர் மேனியாக; கருணை கூர்முகங்கள் ஆறும், கரங்கள் பன்னிரண்டும் கொண்டே ஒரு திருமுருகன் வந்து ஆங்கு உதித்தனன் உலகம் உய்ய" என்று கச்சியப்ப சிவாசாரியார்களும் விளக்கியுள்ளார்.

683. मुनये नमः முனயே நம:

மனனம் செய்பவருக்கு (த்யான நிஷ்டையில் இருப்பவருக்கு வ-ம்.

684. महोत्तमाय नमः மஹோத்தமாய நம:

மான்களுக்கெல்லாம் மேன்மை தங்கியவருக்கு வ-ம்.

685. महोपायाय नमः மஹோபாயாய நம:

எதற்கும் ஸாதனமாய் இருப்பவருக்கு வ-ம். (யாரும் எதை அடையவேண்டுமானாலும் முருகனை வழிபட்டு அவனது அருளால் அடைந்துவிடலாம் என்பது உட்பொருள்.)

686. मोक्षदाय नमः மோக்ஷதாய நம:

மோக்ஷத்தை அளிப்பவருக்கு (வீட்டை அல்லது பேரின்பத்தை அளிப்பவருக்கு) வ - ம். (வீடு பெற நில் என்றுள் ஔவை.)

687. मंगलप्रदाय नमः மங்களப்ரதாய நம:

கல்யாணத்தை விசேஷமாகக் கொடுப்பவருக்கு வ - ம்; முருகனை வழிபடுவதால் ஸகலமங்களங்களும் உண்டாகும். தீமை உண்டாகாது.

नहिकल्याणकृत्कश्चित्, दुर्गतिं तातगच्छति

நல்ல காரியத்தைச் செய்பவன் ஒரு நாளும் கெட்டுப் போக மாட்டான் என்று கீதை கூறுகிறது.

688. मुदाकराय नमः முதாகராய நம:

ஸந்தோஷத்திற்கு இருப்பிடமானவருக்கு வ - ம்.

689. मुक्तिदात्रे नमः முக்திதாத்ரே நம:

பேரின்பத்தை அளிப்பவருக்கு வ - ம்.

690. महाभोगाय नमः மஹாபோகாய நம:

பெரிய வடிவம் கொண்டவருக்கு (மேன்மை தங்கிய ஸுகத்தை அனுபவிப்பவருக்கு) வ - ம்.

691. महोरगाय नमः மஹோரகாய நம:

பெரிய பாம்பின் வடிவம் கொண்டவருக்கு வ - ம்.

692. यशस्कराय नमः யசஸ்கராய நம:

(தன் பக்தர்களுக்கு) நல்ல புகழ் உண்டாகும்படி செய்பவருக்கு வ - ம்.

693. योगयोनये नमः யோகயோனயே நம:

யோகங்களுக்கெல்லாம் காரணமாய் இருப்பவருக்கு வ - ம். (யோகம் = மனதை அடக்குவது) (யோகம் = அடையாத பொருளை அடைவது) (யோகம் = ஸம்பந்தம்) அதாவது பரம் பொருளோடு ஒன்றுபட கர்மயோகம்; பக்தியோகம்; ஞான யோகம்; அஷ்டாங்கத்துடன் கூடிய ராஜயோகம் இவைகளை ஸாதனமாகக்கொண்டு பேரின்பமடையலாம். இதற்கும் காரணமாய் இருப்பவன் முருகன்.

*694.* **योगिष्ठाय नमः** *யோகிஷ்டாய நம:*

**யோகிகளிடத்தில் இருப்பவருக்கு வ - ம்.**

*695.* **यमिनांवराय नमः** *யமிஞம்வராய நம:*

**இந்திரிய நிக்ரகம் செய்த பெரியவர்களுக்கெல்லாம் ச்ரேஷ்டமாய் இருப்பவருக்கு வ - ம்.**

*696.* **यशस्विने नमः** *யசஸ்விமே நம:*

**புகழ் உடையவருக்கு வ - ம்.**

*697.* **योगपुरुषाय नमः** *யோகபுருஷாய நம:*

**யோகத்திஞல் பாபத்தை போக்கடிப்பவருக்கு வ - ம். யோகத்திஞல் த்யானம் செய்யத் தகுந்தவர் என்பது உட்பொருள்.**

*698.* **योग्याय नमः** *யோக்யாய நம:*

**யோக நிலையில் இருப்பவருக்கு வ - ம்.**

*699.* **योगनिधये नमः** *யோகநிதயே நம:*

**யோகத்திற்கு இருப்பிடமானவருக்கு வ - ம்.**

*700.* **यमिने नमः** *யமினே நம:*

**ஐம்புலன்களையும் அடக்கும் தன்மை உள்ளவருக்கு வ - ம்.**

*701.* **यतिसेव्याय नमः** *யதிஸேவ்யாய நம:*

**ஸன்யாஸிகளாலும் வணங்கத் தகுந்தவருக்கு வ - ம். (திருச்செந்தூரில் ஆதிசங்கர பகவத்பாதர் அவர்கள் சுப்ரமண்ய புஜங்கம் பாடி நன்மை யடைந்தார் என்பதும் இங்கு குறிப்பிடத் தகுந்தது.)**

*702.* **योगयुक्ताय नमः** *யோகயுக்தாய நம:*

**யோகத்தோடு கூடியவருக்கு வ - ம்.**

*703.* **योगविदे नमः** *யோகவிதே நம:*

**யோகத்தை அறிந்தவருக்கு வ - ம்.**

704. योगसिद्धिदाय नमः யோகஸித்திதாய நம:
யோக நிலையில் உள்ளவர்களுக்கு அதன் பயனை அளிப்ப வருக்கு வ - ம்.

705. यन्त्राय नमः யந்த்ராய நம:
யந்த்ரவடிவாய் இருப்பவருக்கு வ - ம். ஷட் (ஆறு) கோணம் உள்ளது முருகனுக்கு விசேஷமானது.

706. यन्त्रिणे नमः யந்த்ரிணே நம:
யந்த்ரத்தை உடையவருக்கு வ - ம்.

707. यन्त्रज्ञाय नमः யந்த்ரஞ்ஞாய நம:
யந்த்ரத்தின் தத்வத்தை அறிந்தவருக்கு வ - ம்.

708. यन्त्रवते नमः யந்த்ரவதே நம:
யந்த்ரத்தை உடையவருக்கு வ - ம்.

709. यन्त्रवाहकाय नमः யந்த்ரவாஹகாய நம:
யந்த்ரத்தை வஹிப்பவருக்கு வ - ம்.

710. यातनारहिताय नमः யாதனாரஹிதாய நம:
துன்பம் இல்லாதவருக்கு வ - ம்.

711. योगिने नमः யோகினே நம:
யோகத்தை உடையவருக்கு வ - ம்.

712. योगीशाय नमः யோகீசாய நம:
யோகிகளுக்கெல்லாம் நாயகனாய் இருப்பவருக்கு வ - ம்.

713. योगिनांवराय नमः யோகினாம்வராய நம:
யோகிகளுக்குள் ச்ரேஷ்டராய் இருப்பவருக்கு வ - ம்.

714. रमणीयाय नमः ரமணீயாய நம:
மிக அழகுவாய்ந்தவருக்கு வ - ம்.

715. **रम्यरूपाय नमः** *ரம்யரூபாய நம:*

அழகான உருவமுள்ளவருக்கு வ - ம்.

716. **रसज्ञाय नमः** *ரஸஞ்ஞாய நம:*

ரஸத்தை (ஸாரத்தை) உண்மைப் பொருளை அறிந்தவருக்கு வ - ம். **रसो वै सः** என்று உபநிஷத்து வாக்கியம் பரம் பொருளை ரஸம் என்று குறிப்பிடுகிறது.

717. **रसभावनाय नमः** *ரஸபாவநாய நம:*

மதுரமான (எல்லோராலும் விரும்பத்தக்க) எண்ணத்தை உடையவருக்கு வ - ம்.

718. **रंजनाय नमः** *ரஞ்சனாய நம:*

பிறரை ஸந்தோஷப்படுத்துபவருக்கு வ - ம்.

719. **रंजिताय नमः** *ரஞ்சிதாய நம:*

எப்பொழுதும் ஸந்தோஷமாய் இருப்பவருக்கு வ - ம்.

720. **रागिणे नमः** *ராகிணே நம:*

ஆசையுள்ளவருக்கு வ - ம். (இல்லறத்தில் இருப்பவர்களுக்கு அதன் நிலையை உணர்த்த இந்நிலையில் இருக்கிறார் என்பது உட்பொருள்.)

721. **रुचिराय नमः** *ருசிராய நம:*

விருப்பம் உள்ளவருக்கு (ரஸிக்கும் தன்மை உள்ளவருக்கு) வ - ம்.

722. **रुद्रसंभवाय नमः** *ருத்ரசம்பவாய நம:*

சிவபெருமானுடைய நெற்றிக் கண்களில் தோன்றிய நெருப்புப் பொறிகள் சரவணப் பொய்கையில் குழந்தையாக ஆவிர்பவித்தது. கந்தபுராணத்தில் விரிவாகக் காண்க.

723. **रणप्रियाय नमः** *ரணப்ரியாய நம:*

யுத்தம் செய்வதில் விருப்பம் உள்ளவருக்கு வ - ம்,

724 **रणोदाराय नमः** *ரணோதாராய நம:*

யுத்தத்தில் கம்பீரமான தோற்றமுள்ளவருக்கு வ - ம்.

725. **रागद्वेषविनाशनाय नमः** *ராகத்வேஷவிநாசநாய நம:*

விருப்பம் வெருப்பு இவ்விரண்டையும் அழிப்பவருக்கு வ - ம்

726. **रत्नार्चिषे नमः** *ரத்னார்ச்சிஷே நம:*

ரத்னம்போன்ற காந்தியுடையவருக்கு வ - ம்.

727. **रुचिराय नमः** *ருசிராய நம:*

விருப்பம் உள்ளவருக்கு வ - ம்.

728. **रम्याय नमः** *ரம்யாய நம:*

அழகாய் இருப்பவருக்கு வ - ம்.

729. **रूपलावण्य विग्रहाय नमः** *ரூபலாவண்ய விக்ரஹாய நம:*

நன்கு ஸாமுத்ரிகா சாஸ்திரங்களில் சொல்லியபடி அமைந்த அழகுள்ள உருவத்துடன் சந்திரன் சூரியன் இவர்களுக்குள்ள காந்தியுடன் கூடிய சரீரத்தை உடையவருக்கு வ - ம்.

730. **रत्नांगद धराय नमः** *ரத்னாங்கத தராய நம:*

(நல்ல தங்கத்தில்) ரத்தினங்களால் செய்யப்பட்ட அங்கதம் என்ற ஆபரணம் அணிந்திருப்பவருக்கு வ - ம்.

வீரர்கள் அணிந்துகொள்ளும் ஆபரணம் அங்கதம் எனப்படும் (முழங்கைக்கும் தோளுக்கும் நடுவில் கையில் அணிந்து கொள்ளுவது. இதை வீரர்கள் தானுக அணிவதில்லை. வெற்றி கொண்ட வீரனுக்கு ஸன்மானமாக அரசனுல் அளிக்கப்படுவது. ராமாயணத்தில் வெற்றிகொண்ட ராமன் தன் பட்டாபிஷேக மஹோத்ஸவத்தில் தன் வெற்றிக்குக் காரணமான அங்கதனுக்கு (வாலியின் புதல்வனுக்கு) அங்கதாய அங்கதே ததௌ **अङ्गदाय अङ्गदे ददौ** இரண்டு தோள் வளைகள் (ஜோடியாக) ஸன்மானம் செய்தார் என்று வால்மீகி முனிவர் கூறுவதும் கவனிக்கத்தகுந்தது. பண்டிதர்களுக்கும் அரசனுல் அங்கதம் அளிக்கப்படுவதும் உண்டு இதைத் தோடா என்று சொல்லுவார்கள்.)

731. रत्नभूषणाय नमः ரத்னபூஷணுய நம:
ரத்னங்களால் செய்யப்பட்ட ஆபரணங்களை உடையவருக்கு வ - ம்.

732. रमणीयकायनमः ரமணீயகாய நம:
அழகான சரீரத்தை உடையவருக்கு வ - ம்.

733. रुचिकृते नमः ருசிக்ருதே நம:
பிடிக்கும்படிச் செய்பவருக்கு வ - ம்.

734. रोचमानाय नमः ரோசமாணுய நம:
எப்பொழுதும் திருப்தியாய் இருப்பவருக்கு வ - ம்.

735. रंजिताय नमः ரஞ்சிதாய நம:
எப்பொழுதும் சந்தோஷமாய் இருப்பவருக்கு வ - ம்.

736. रोगनाशनाय नमः ரோகஞசஞய நம:
வியாதிகளை நாசம் செய்பவருக்கு வ - ம்.

737. राजीवाक्षाय नमः ராஜீவாக்ஷாய நம:
செந்தாமரை மலர்போன்ற கண்களை உடையவருக்கு வ - ம்.

738. राजराजाय नमः ராஜராஜாய நம:
அரசர்களுக்கெல்லாம் அரசஞய் இருப்பவருக்கு வ - ம்.

739. रक्तमाल्यानुलेपनाय नमः ரக்தமால்யானுலேபஞய நம:
சிகப்பான மாலைகளை அணிந்திருப்பவரும் சிகப்பு சந்தணப் பூச்சையுடையவருமான முருகனுக்கு வ - ம்.

740. राजद्वेदागमस्तुत्याय नमः ராஜத்வேதாகமஸ்துத்யாய நம:
ப்ரகாசிக்கின்ற வேதங்களாலும் ஆகமங்களாலும் துதிக்கப் படுகின்றவருக்கு வ - ம்.

741. रजस्सत्वगुणान्विताय नमः ரஜஸ்ஸத்வகுணாந்விதாய நம:

ரஜஸ், தமஸ், ஸத்வம் என்ற முக்குணங்களையும் உடையவருக்கு வ - ம்.

742. रजनीशकलारम्याय नमः ரஜனீசகலாரம்யாய நம:
சந்திரகலையினால் அழகாய் இருப்பவருக்கு வ - ம்.

743. रत्नकुंडलमंडिताय नमः ரத்னகுண்டலமண்டிதாய நம:

ரத்னங்கள் பதித்த கடுக்கனால் அலங்கரிக்கப்பட்டவருக்கு வ - ம்.

744. रत्नसन्मौलिशोभाढ्यायनमः ரத்னஸன்மௌளி சோபாட்யாய நம:

ரத்னங்கள் இழைக்கப்பட்ட கிரீடத்தினால் அழகுபெற்று ப்ரகாசிப்பவருக்கு வ - ம்.

ப்ரம்மாதி தேவர்கள் விசுவகர்மாவினால் நிர்மாணம் செய்யப்பட்ட கிரீடங்களை முருகனது ஆறு தலைகளிலும் சேனாபதி பட்டாபிஷேகம் செய்து சூட்டினார்கள் என்று கந்தபுராணம் கூறுவதைப் பார்க்கலாம்.

किरीटानिचरम्याणि विश्वकर्मकृतानिवै ।
नानारत्नविचित्राणि शुद्धस्वर्णमयानिच ।
वज्रहस्तः समादायभूषयामास षण्मुखं ॥

கிரீடாநிசரம்யாணி விச்வகர்ம க்ருதானிவை |
நானாரத்நவிசித்ராணி சுத்தஸ்வர்ணமயானி ச |
வஜ்ரஹஸ்த: ஸமாதாயபூஷயாமாஸ ஷண்முகம் ||

745. रणन्मंजीरभूषणाय नमः ரணந்மஞ்ஜீர பூஷணாய நம

அழகாகவும் இனிமையாகவும் சப்திக்கின்றதுமான பாதஸரங்களை (கால் கொலுஸு) அணிந்திருப்பவருக்கு வ - ம்.

746. **लोकैकनाथायनमः** *லோகைகநாதாய நம:*

எல்லா உலகத்திற்கும் முக்கிய நாயகனாய் இருப்பவருக்கு வ - ம்.

747. **लोकेशाय नमः** *லோகேசாய நம:*

உலகத்திற்கெல்லாம் ஈச்வரனாய் இருப்பவருக்கு வ - ம்.

748. **ललिताय नमः** *லலிதாய நம:*

ம்ருதுவாயும் அழகாயும் இருப்பவருக்கு வ - ம்.

749. **लोकनायकाय नमः** *லோகநாயகாய நம:*

உலக நாயகனுக்கு வ - ம். (ஒவ்வொரு ஜீவனிடத்தும் உள்ளிருந்து ப்ரேரிப்பவன் என்பது உட்பொருள்.)

750. **लोकरक्षाय नमः** *லோகரக்ஷாய நம:*

எல்லா உலகத்தையும் காப்பாற்றுபவருக்கு வ - ம்.

751. **लोकशिक्षायनमः** *லோகசிக்ஷாய நம:*

உலகத்தில் உள்ள துஷ்டர்களை தண்டிப்பவருக்கு வ - ம்.

752. **लोकलोचनरंजितायनमः** *லோகலோசனரஞ்ஜிதாய நம:*

உலக மக்களுடைய கண்களுக்கு திருப்தி அளிப்பவருக்கு வ - ம்.

753. **लोकबन्धवे नमः** *லோகபந்தவே நம:*

உலகத்தில் உள்ள எல்லா மக்களுக்கும் உறவினராய் இருப்பவருக்கு வ - ம்.

754. **लोकधात्रे नमः** *லோகதாத்ரே நம:*

எல்லா உலகங்களையும் போஷிப்பவருக்கு வ - ம்.

755. **लोकत्रयमहाहिताय नमः** *லோகத்ரயமஹாஹிதாய நம:*

மூவுலகத்தினருக்கும் உயர்ந்த நண்பராய் இருப்பவருக்கு வ - ம்.

756. लोकचूडामणये नमः லோகசூடாமணயே நம:

எல்லா உலகுக்கும் சிரோபூஷணம் போன்றவராய் இருப்பவருக்கு வ - ம்.

757. लोकवन्द्याय नमः லோகவந்த்யாய நம:

எல்லா உலகத்தினராலும் வணங்கத் தகுந்தவருக்கு வ - ம்.

758. लावण्यविग्रहाय नमः லாவண்யவிக்ரஹாய நம:

அழகு (சரீரத்தில் அமைந்த ஒருவித காந்தி) வாய்ந்த திருமேனியை உடையவருக்கு வ - ம்.

759 लोकाध्यक्षाय नमः லோகாத்யக்ஷாய நம:

உலகுக்கெல்லாம் அதிபதியாய் இருக்கும் முருகனுக்கு வ - ம்.

760. लीलावते नमः லீலாவதே நம:

திருவிளையாடலுடையவருக்கு வ - ம்.

761. लोकोत्तरगुणान्विताय नमः லோகோத்தரகுணாந்விதாய நம:

எல்லோரிடத்தும் உள்ள குணங்களைக் காட்டிலும் மேன்மை கொண்ட குணங்களோடு கூடியவருக்கு வ - ம்.

762. वरिष्ठाय नमः வரிஷ்டாய நம:

யாவரினும் மேன்மை தங்கியவருக்கு வ - ம்.

763. वरदाय नमः வரதாய நம:

வரன் கொடுப்பவருக்கு வ - ம்.

764. वैद्याय नमः வைத்யாய நம:

வைத்யராய் இருப்பவருக்கு வ - ம்.

(ஸாம்ஸாரிக ரோகத்தை அழிக்க ஞானமாகிற மருந்தை அருளி முக்தி யளிப்பவர் என்பது உட்பொருள்)

765. **विशिष्टाय नमः** *விசிஷ்டாய நம:*
எல்லோரைக் காட்டிலும் ச்ரேஷ்டமானவருக்கு வ - ம்.

766. **विक्रमाय नमः** *விக்ரமாய நம:*
அதிக பலமுள்ளவருக்கு வ - ம்.

767. **विभवे नमः** *விபவே நம:*
ஸாமர்த்யமுடையவருக்கு வ - ம்.

768. **विबुधाग्रचराय नमः** *விபுதாக்ரசராய நம:*
தேவர்களுக்கு முன்பு செல்பவருக்கு வ - ம்.

769. **वश्याय नमः** *வச்யாய நம:*
யாவரையும் தன்வசம் செய்துகொள்பவருக்கு வ - ம்.

770. **विकल्पवर्जिताय नमः** *விகல்பவர்ஜிதாய நம:*
ஸந்தேகமில்லாதவருக்கு வ - ம்.

771. **विपाशाय नमः** *விபாசாய நம:*
பாசம் அற்றவருக்கு வ - ம். (பாசத்தைத் தன்வசப்படுத்திக் கொண்டிருப்பவர் என்பது உட்பொருள்)

772. **विगतातंकाय नमः** *விகதாதங்காய நம:*
பஸ்சாத்தாபம் இல்லாதவருக்கு வ - ம்.

773. **विचित्रांगाय नमः** *விசித்ராங்காய நம:*
அழகுள்ள அவயவங்களையுடையவருக்கு வ - ம்.

774. **विरोचनाय नमः** *விரோசனாய நம:*
யாவருக்கும் பிரியமாய் இருப்பவருக்கு வ - ம்.

775. **विद्याधराय नमः** *வித்யாதராய நம:*
எல்லாக் கல்விகளையும் அறிந்தவருக்கு வ - ம்.

776. **विशुद्धात्मने नमः** விசுத்தாத்மனே நம:
தூய உள்ளம் உடையவருக்கு வ - ம்.

777. **वेदांगाय नमः** வேதாங்காய நம:
வேதமூர்த்தியாய் இருப்பவருக்கு வ - ம்.

778. **विबुधप्रियाय नमः** விபுதப்ரியாய நம:
தேவர்களிடம் அன்புள்ளவருக்கு (தூய குணமுள்ள வித்வான்களிடம் அன்புகொண்டவருக்கு) வ - ம்.

779. **वचस्कराय नमः** வசஸ்கராய நம:
வார்த்தைகளைச் செய்பவருக்கு வ - ம்.
(வேதகர்தா என்பது உட்பொருள்)

780. **व्यापकाय नमः** வ்யாபகாய நம:
எங்கும் நிறைந்திருப்பவருக்கு வ - ம்.

781. **विज्ञानिने नमः** விஞ்ஞானினே நம:
எல்லாவிதமான ஆராய்ச்சி யறிவுள்ளவருக்கு வ - ம்.

ஆத்மஞானத்தைத் தவிற மற்ற எல்லா அறிவுக்கும் விஞ்ஞானம் என்று பெயர். விஞ்ஞானத்தைக் கொண்டு ஆத்மஞானத்தை அடையலாம். இதை மனதில் எண்ணியே சேக்கிழார் பெருமானும் "உலகெலாம் உணர்ந்தோதற் கரியவன்" என்றார்.

**विज्ञानं यज्ञंतनुते;। कर्माणि तनुतेऽपिच; । विज्ञानं देवा सर्वे; । ब्रह्मज्येष्ठमुपासते । विज्ञानं ब्रह्म चेद्वेद । तस्माच्चेन्नप्रमाद्यति । शरीरे पाप्मनोहित्वा । सर्वान्कामान्समश्नुत इति । तस्यैष एव शरीर आत्मा ॥**

விஞ்ஞானம் யஞ்ஞம்தனுதே; கர்மாணிதனுதேபிச; விஞ்ஞானம் தேவாஸ்ஸர்வே; ப்ரம்ம ஜ்யேஷ்டமுபாஸதே; விஞ்ஞானம் ப்ரும்ஹ சேத்வேத; தஸ்மாச் சேன்னப்ரமாத்யதி; சரீரேபாப்மனோஹித்வா; ஸர்வான்காமான் ஸமச்னுத இதி; தஸ்மைஷ ஏவ சரீர ஆத்மா; (இதன் பொருள்)

விஞ்ஞானமே வேள்வி முதலிய புண்ய காரியத்தைச் செய்கின்றது. மற்ற எல்லாக் காரியங்களையும் விஞ்ஞானமே செய்கிறது. தேவர்கள் எல்லோரும் விஞ்ஞானத்தையே முதலில் தோன்றிய ப்ரம்மமாக (தமயனுக) உபாஸிக்கிருர்கள். விஞ்ஞானத்தை ப்ரம்மமாக அறிந்தவன், அதாவது விஞ்ஞானத்தைக் கொண்டு உலகத்திற்கு ஆக்கல் துறையில் ஈடுபட்டுத் (அழிக்க முயற்சிக்காமல்) தனக்கும் இதர மக்களுக்கும் உதவினுல் அவன் அதனுல் ஸகல தீமைகளையும் விட்டு எல்லா இன்பங்களையும் அனுபவிக்கிருன். இந்த விஞ்ஞானமாகிற உடலுக்கு ஜீவனே (ப்ரம்மமே உயிர்) ஆத்மாவாக அமைந்திருக்கிருன் என்று தைத்திரிய ஆனந்தவல்லி கூறுகிறது. மேலும் ப்ருகு என்பவர் தன் தகப்பனிடம் தத்வோபதேசம் கேட்க தகப்பன் தவத்தினுல் அறிந்துகொள் என்று சொல்ல அதைக்கேட்ட குமாரன் தவம் செய்து முதலில் அன்னம் ப்ரும்மா என்று அறிந்து மறுபடியும் தவம் செய்து ப்ராணனை ப்ரம்மமாக அறிந்தும் மனதை ப்ரம்மமாக அறிந்தும் த்ருப்தியில்லாது மறுபடியும் தகப்பன் மொழியால் தவம்செய்து விஞ்ஞானத்தை ப்ரம்மமாக அறிந்தான்.

**सतपस्तप्त्वा; । विज्ञानं ब्रह्मेतिव्यजानात् । विज्ञानाध्येवखल्विमानि भूतानि जायन्ते । विज्ञानेन जातानि जीवन्ति । विज्ञानं प्रयन्त्यभिसं विशन्तीति**

விஞ்ஞானத்தினுல்தான் எல்லாம் உண்டாகின்றன. விஞ்ஞானத்தினுலேயே வளர்ந்து உயிர்வாழ்கின்றன, முடிவில் அதனிடமே மறைந்து அழிந்துவிடுகின்றன என்றும் தைத்ரீய ப்ருகுவல்லியிலும் கூறப்பட்டிருக்கிறது. முருகன் விஞ்ஞானத் துறையில் வல்லவன் என்று இந்த நாமாவினுல் இங்கு கூறப்படுகிறது.

782. **विनयान्विताय नमः** வினயாந்விதாய நம:

அடக்கம் உள்ளவருக்கு வ - ம்.

(அறிவின் வளர்ச்சியாலேயே விநயம் (அடக்கம்) உண்டாகிறது. ராமாயணத்தில் ஆஞ்சனேயனை முதன் முதலில் சந்தித்த ராமன் லக்ஷ்மணனிடம் ஹநுமானைப் புகழுமிடத்து,

**नाऽनृग्वेदविनीतस्य** "நாந்ருக்வேதவினீதஸ்ய"

அறிவுக்களஞ்சியமான ருக்வேதம் படிக்காவிட்டால் இவ்வளவு அடக்கம் இராது. ஆகவே அடக்கத்திற்கு மூலகாரணம் ருக்வேதாத்யயனம் (அறிவின் வளர்ச்சியே) என்று கூறுகிருர்

" நிறைகுடம் தளும்பாது " என்ற பழமொழியும் இங்கு கவனிக்கத் தகுந்தது.

" विद्यादाति विनयं " என்று நீதி நூலும் கூறுகிறது.

இங்கு "விஞ்ஞானி"னே நம: என்ற நாமாவுக்கு அடுத்தாற் போல் இந்த நாமா அமைந்தது இந்நூலுக்கே ஒரு தனிப் பெருமை தருவதாகும்.

783. **विद्वत्तमाय नम;** *வித்வத்தமாய நம:*

உலகில் உள்ள யாவரினும் மிகுந்த அறிவு உள்ளவருக்கு வ - ம். இதுகுணம் இதுதோஷம் என்று அறிந்த விவேகமுள்ளவனே வித்வான் எனப்படுவன்.

" विद्वान्विपश्चित् दोषज्ञः " என்று அமரஸிம்மன் கூறுகிறுன்.

இவ்விதம் அறிவு உள்ளவன் வித்வான், மற்றும் சிலரைக் காட்டிலும் மேன்மை பெற்ருல் வித்வத்தர: என்று சொல்லுவது வழக்கம்; உலகில் யாவரையும் காட்டிலும் மேன்மைகொண்ட அறிவு இருந்தால் அவரை வித்வத்தம: என்று அழைப்பார்கள். முருகன் ப்ரமனுக்கும் தெரியாத ப்ரணவத்தின் (ஓங்காரத்தின்) பொருளை தன் தகப்பனும் ஸர்வேச்வரனுமான சிவபெருமானிடம் உரைத்தான் என்ருல் அவரது அறிவுத்திறனை எவரால் உரைக்க முடியும் (ஒருவராலும் இயலாது என்பது பொருள்). ஸாமவேத உபநிஷத்தாகிய சாந்தோக்யம் என்ற உபநிஷத்தில்

" तंस्कन्दइत्याचक्षते " தம்ஸ்கந்தஇத்யாசக்ஷதே

என்று இருமுறை கூறி ஸநத்குமாரரைப் புகழ்கிறது.

784. **विरोधिघ्नाय नमः** *விரோதிக்னய நம:*

(பக்தர்களின்) விரோதிகளை நாசம் செய்பவருக்கு வ - ம்.

785. **वीराय नमः** *வீராய நம:*

நல்ல பாஹுபலம் இருந்து சத்ருக்களை ஜயிப்பவருக்கு வ - ம்.

786. **विगद्रागवते नमः** *விகதராகவதே நம:*

ஆசை இல்லாதவருக்கு வ - ம்.

787. वीतभावाय नमः வீதபாவாய நம:
ஒருவிதமான பற்றும் இல்லாதவருக்கு வ - ம்.

788. विनीतात्मने नमः விநீதாத்மனே நம:
தன்வசம்கொண்ட மனதையுடையவருக்கு வ - ம்.

789. वेदगर्भाय नमः வேதகர்பாய நம:
வேதங்களைத் தன் உள் அடக்கியவருக்கு (அதாவது வேதங்களை நன்கு உணர்ந்தவருக்கு) வ - ம்.

790. वसुप्रदाय नमः வஸுப்ரதாய நம:
(பக்தர்களுக்கு) எப்பொருளையும் கொடுப்பவருக்கு வ - ம்.

791. विश्वदीप्तये नमः விச்வதீப்தயே நம:
உலகத்திற்கே தீபம்போன்றவருக்கு வ - ம்.

792. विशालाक्षाय नमः விசாலாக்ஷாய நம:
நீண்டும் அகண்டும் அழகுள்ள கண்களையுடையவருக்கு வ - ம்.

793. विजितात्मने नमः விஜிதாத்மனே நம:
தன்வசப்பட்ட மனதை யுடையவருக்கு வ - ம்.

794. विभावनाय नमः விபாவனாய நம:
நல்லெண்ணம் உள்ளவருக்கு வ - ம்.

795. वेदवेद्याय नमः வேதவேத்யாய நம:
வேதங்களால் அறியத்தகுந்தவருக்கு வ - ம்.

796. विधेयात्मने नमः விதேயாத்மனே நம:
எந்தக் காரியத்தைச் செய்ய நினைத்தாலும் தங்கு தடங்கல் அன்னியில் மனோ நிலையில் மாறுதல் இல்லாமல் மனதை அக்காரியத்தில் செலுத்தும் தன்மையுடையவருக்கு வ - ம்.

797. वीतदोषाय नमः வீததோஷாய நம:
குற்றமில்லாதவருக்கு வ - ம்.

798. **वेदविदे नमः** *வேதவிதே நம:*

வேதத்தை அறிந்தவருக்கு வணக்கம்.

799. **विश्वकर्मणेनमः** *விச்வகர்மணே நம:*

உலகத்தைப் படைக்கும் தொழில் உடையவருக்கு வ - ம்.
(விச்வ கர்மா என்ற தேவதச்சனாய் இருப்பவர் என்றும் பொருள் கூறலாம்.)

800. **वीतभयाय नमः** *வீதபயாய நம:*

பயமில்லாதவருக்கு வ - ம்.

**भीषाऽस्माद्वात=पवते, भीषोदेतिसूर्यः, भीषास्मादग्निश्चेन्द्रश्च, मृत्युर्धावतिपंचम इति**

*பீஷாஸ்மாத்வாத=பவதே, பீஷோதேதிஸூர்ய:, பீஷாஸ்மாதக்னிஸ்சேந்த்ரஸ்ச, ம்ருத்யுர்தாவதிபஞ்சம இதி*

எவருடைய பயத்தினால் வாயு வீசுகிறதோ, எவருடைய பயத்தினால் சூரியன் உதிக்கின்றானோ, எவருடைய பயத்தினால் அக்னியும் இந்த்ரனும் தம் தம் காரியங்களில் ஈடுபடுகிறார்களோ, எவருடைய பயத்தினால் தர்ம தேவதையாகிய எமனும் ஐந்தாவதாக ஓடி தன் காரியத்தில் வேகமுள்ளவனாக அமைகிறானோ; அப்படி யாவரும் அஞ்சக்கூடிய பரம்பொருளாகிய முருகன் யாரிடம் பயப்படப்போகிறான். அவருக்குப் பயம் ஏது. எவரை அடைந்தால் பயம் துலைந்துவிடுமோ; பயமில்லாமல் ஸ்திரமாக இருப்பானோ அப்பேறபட்டவர் முருகக் கடவுள்

**अभसोऽभयंगतोभवति, अभयंप्रतिष्ठांविन्दते**

*அபசோ ஽பயம்கதோபவதி அபயம்ப்ரதிஷ்டாம் விந்ததே*

என்று உபநிஷத்துக்கள் அப்பெருமானது பெருமையை வாயாரப் புகழ்கின்றன. இவ்வறிய கருத்தை இந்நாமா வெகு அழகாக வெளியிடுவது பக்தர்களுக்கு மிகுந்த மகிழ்ச்சி தருவதாகும்.

801. **वागीशाय नम** *வாகீசாய நம:*

வாக்குக்கு எல்லாம் ஈசுவரனாய் விளங்குபவருக்கு வ - ம். வாக்கு (சொல்) அவருக்கு வசமானது. சிவபக்தசிகாமணி

யாகிய அப்பர் ஸ்வாமிகளுக்கும் வாகீசர்(திருநாவுக்கரசர்) என்று பெயர். மதுரமாயும் தங்கு தடங்கல் இல்லாமலும் வாக்கு ப்ரவாஹம்போல் வருவதால் திருநாவுக்கரசர் என்று பெயர் பெற்றார். இது விபரம் சேக்கிழார் பெரிய புராணத்தில் விபரமாகக் கூறப் பட்டுள்ளது.

802. **वासवार्चिताय नमः** வாசவார்ச்சிதாய நம:

தேவேந்திரனால் பூஜிக்கப்பட்டவருக்கு வ - ம்.

803. **वीरध्वंसाय नमः** வீரத்வம்சாய நம:

(துஷ்ட ஸ்வபாவம் உள்ள) வீரர்களை வதம் செய்பவருக்கு வ - ம்.

804. **विश्वमूर्तये नमः** விச்வமூர்த்தயே நம:

உலகத்தையே தன்னுருவாகக் கொண்டவருக்கு வ - ம்.

எல்லாவுலகும் தன்னிடம் அடங்கும்படியான அப்பெரு வடிவம் கொண்டவர் என்பது பொருள். ராமாயணத்தில் ஸீதாதேவிக்கு ஆஞ்சனேயர் பெருவடிவம் காட்டித் தன் வல்லமையைத் தெரிவித்தார். அது உலகம் போன்ற பெருவடிவம். இதைக் காட்டிலும் பெரியது பாகவதத்தில் மகாபலியின் யாகத்தில் வாமனர் விசுவரூபம் கொண்டது. வாமனர் தன் அடி கொண்டு பூமியையும் வானத்தையும் இரண்டடியில் அளந்து பலியை வெற்றிகொண்டார். ஆனால் முருகனது பெருவடிவம், முருகன் வேறு, உலகம் வேறல்ல,முருகனே உலகம், உலகமே முருகன். இதுபோலவே கீதையில் அர்ஜுனனுக்கு ஸ்ரீகிருஷ்ண பகவான் பெருவடிவம் கொண்டு (உலகத்தையே வடிவமாகக் கொண்டு) காட்டி அருளினார். கிருஷ்ணனது பெருவடிவத்தை அர்ஜுனன் முழுதும் கண்டான். ஆனால் முருகன் பெருவடிவத்தை முழுவதும் பார்க்க இயலாது. இதை ஸ்ரீ கச்சியப்பசிவாசாரியார் அவர்கள் தம் கந்தபுராணத்தில்

கூறிமற்றினைய தம்மை குரைகடல் உலகம் திக்கும்
மாறிலாப்புவனம் அண்டம் வானவர் உயிர்கள் யாவும்
ஆறுமாமுகத்து வள்ளல் மேனியில் அமைந்ததன்றி
வேறில என்ன ஆங்கோர்வியன் பெருவடிவம் கொண்டான்.

இறுதியும் முதலுமில்லா இப்பெருவடிவம் தன்னைக்
கறைவிடம் உறழும் சூரன் கண்டு விம்மிதத்தின் நிற்ப
அறிவரும் உணர்தல் தேற்று ஆறுமாமுகத்து வள்ளல்
சிறிது நல்லுணர்ச்சி நல்க இனையன செப்பலுற்றான்.

ஆயிரம்கோடி காமர் அழகெலாம் திரண்டொன்றாகி
மேயின எனினும் செவ்வேள்விமலமாம் சரணம் தன்னில்
தூய நல்லெழுலுக்காற்று தென்றிடின் இனையதொல்லோன்
மாயிருவடிவுற்கெல்லாம் உவமையார் வகுக்கவல்லார்

என்று வெகு அழகாகச் சொல்லப்பட்டிருப்பதும் இங்கு குறிப்பிடத் தகுந்தது.

805. **विश्वरूपाय नमः** விச்வரூபாய நம:

விச்வத்தையே தன்னுருவாக் கொண்டவருக்கு வ - ம்.

உலகத்தைத் தவிற முருகன் தனியில்லை. முருகன் எங்கும் நிறைந்து எப்பொருளாயும் விளங்குகிறார். வ்யாபகர் என்பதை இதனாலும் விளக்குகிறார்.

806. **वरासनाय नमः** வராசனாய நம:

சிறந்த பீடத்தை (ஆஸனமாக) ஸிம்மாஸனமாக உடையவருக்கு வ - ம்.

807. **विशाखाय नमः** விசாகாய நம:

பல உருவம் கொண்டவருக்கு வ - ம்.

ஒரு சமயம் பார்வதி பரமசிவன், அக்னி, கிருத்திகை ஆகிய நால்வரும் முருகனது அன்பை அறிய விரும்பி ஒரே சமயத்தில் எல்லோரும் அழைத்தனர். அதுகண்ட முருகன் அதே ஸமயத்தில் தன்னை நான்கு உருவாகச் செய்துகொண்டு ஸ்கந்தன், சாகன், விசாகன், நைஜமேஷன் என்றமைத்து தனித்தனியே அந்நால்வர்களிடமும் சென்றான். இதைக்கண்டு யாவரும் ஸந்தோஷித்தனர் என்று புராண வரலாறு கூறுகின்றது.

808. **विमलाय नमः** விமலாய நம:

குற்றம் அற்றவருக்கு வ - ம்.

809. **वाग्मिने नमः** வாக்மினே நம:

நன்கு பேசும் திறன் உடையவருக்கு வ - ம்.

810. विदुषे नमः விதுஷே நம:
நல்ல கல்வியறிவு உடையவருக்கு வ - ம்.
நன்கு குணதோஷஞ்ஞானம் உடையவர் என்பது பொருள்

811. वेदधराय नमः வேததராய நம:
வேதங்களைத் தாங்கி நிற்பவருக்கு வ - ம்.

812. वटवे नमः வடவே நம:
ப்ரும்மசாரி (மாணவ) படிவத்தில் இருப்பவருக்கு வ - ம்.

813. वीरचूडामणये नमः வீரசூடாமணயே நம:
வீரர்களுக்குள் (சிரோபூஷணமாய்) சிறந்து விளங்குபவருக்கு வ - ம்.

814. वीराय नमः வீராய நம:
வீரனாய் இருப்பவருக்கு வ - ம்.

815. विद्येशाय नमः வித்யேசாய நம:
கல்விகளுக்கெல்லாம் அரசனாய் இருப்பவருக்கு வ - ம்.

816. विबुधाश्रयाय नमः விபுதாச்ரயாய நம:
தேவர்களுக்கு (வித்வான்களுக்கு) ரக்ஷகராக (பாதுகாப்பாளராக) இருப்பவருக்கு வ - ம்.

817. विजयिने नमः விஜயினே நம:
ஜயசீலனாய் இருப்பவருக்கு வ - ம்.

818. विनयिने नमः வினயினே நம:
அடக்கம் உள்ளவருக்கு வ - ம்.

819. वेत्रे नमः வேத்ரே நம:
அறிவாளியாய் (ஞானியாய்) இருப்பவருக்கு வ - ம்.

820. वरीयसे नमः வரீயஸே நம:
மேன்மையாய் இருப்பவருக்கு வ - ம்.

821. वीरजाय नमः வீரஜாய நம:

வீரனான சிவன்பால் தோன்றியவருக்கு வ - ம்.

ஜலந்த்ரன் என்று ஒரு அஸுரன் இருந்தான். அவன் சிவனைக் குறித்துத் தவம் செய்து தன்னைக்காட்டிலும் பலசாலி இருக்கக்கூடாது என்று வரன் கேட்டுக்கொண்டான். பிறகு அவ்வசுரன் தேவர்களையும் அஸுரர்களையும் ராக்ஷஸர்களையும் சண்டைக்கு அழைத்தான். ஒருவரும் சண்டைக்குவர பயந்து சரணமடைந்தனர். அதுகண்டு சிவனிடம் வந்து நீங்கள் என்னிடம் சண்டைக்கு வரவேண்டும் என்று பிரார்த்தித்தான். ஆனால் சிவன் நான் ஒரு பரீக்ஷை வைக்கிறேன். அதில் நீ தேர்ச்சி பெற்றால் நான் உன்னுடன் சண்டைக்கு வருவேன் என்று சொல்ல அவனும் ஸம்மதிக்க; சிவன் தன் கால் விரலால் பூமியில் ஒரு வட்டவடிவமான வளையம்கோடு இட்டார். இந்த இடத்தைப் பெயர்த்து எடுத்துவிடு என்றார். அதை எடுக்கும் போது அதுவே சக்ராயுதமாய் அமைந்து அவ்வஸுரன் இறந்து விட்டான். ஆகவே சிவனுக்குள்ள வீரம் யாருக்குமில்லை. அவ்வித வீரனான சிவபெருமானின் குமாரன் முருகக் கடவுள் என்பது புராண வரலாறு.

822. वसवे नमः வஸவே நம:

அஷ்டவஸுக்களின் ஸ்வரூபமாய் இருப்பவருக்கு வ - ம்.

823. वीरघ्नाय नमः வீரக்னய நம:

துஷ்ட வீரர்களை அழிப்பவருக்கு வ - ம்.

824. विज्वराय नमः விஜ்வராய நம:

ஜ்வரம் (தாபம்) இல்லாதவருக்கு வ - ம்.

825. वेद्याय नमः வேத்யாய நம:

யாவராலும் அறியத்தகுந்தவருக்கு வ - ம்.

826. वेगवते नमः வேகவதே நம:

வேகம் உள்ளவருக்கு வ - ம்.

827. वीर्यवते नमः வீர்யவதே நம:

பராக்ரமம் உள்ளவருக்கு வ - ம்.

யாவருக்கும் பெருந்தன்மை அளிப்பது வீரமே யாகும். அரசர்களுக்கும் சேனைத் தலைவர்களுக்கும் வீர்யம் ஆவச்யகம். ராமாயணத்தில் வால்மீகி முனிவர் நாரதரிடம் தனக்குப் பிடித்த ஒரு கதாநாயகனைச் சொல்லுங்கள் எனக் கேட்கும்போது

**कोन्वस्मिन्सांप्रतं लोके गुणवान्कश्च वीर्यवान्**

குணவானும் வீர்யவானுமாய் இருக்கும் நாயகனைக் கூறுங்கள் என்று கேட்கிறார். இதிலும் வீர்யம் சாதாரண வீர்யமல்ல. ஆனால்

**कस्यबिभ्यतिदेवाश्च जातरोषस्य संयुगे ।**

எந்த மகானுபாவனுக்குக் கோபம் வந்தால் தேவர்களும் நடுங்குவார்களோ, அவ்வித வீர்யம்கொண்ட ஒரு ஒப்பற்ற நாயகனைச் சொல்லவேண்டுமென்று கேட்கிறார்.

கவி சக்ரவர்த்தி கம்பரும் "வென்றிசேர் இலங்கையானை வென்ற மால்வீரம் ஓத" என்று ராமனது வீர்யத்தை சிறப்பித்துக் கூறுகிறார். குழந்தைப் பருவத்திலேயே சூரன் முதலிய அஸுரர்களை வென்றார் முருகன் என்றால் அவரது வீர்யம் ச்லாகிக்கத்தகுந்ததல்லவா, ஆகவே அம்முருகனது வீர்யத்தையே இங்கு இந்நாமாவினால் புகழ்கிறார்.

828. **वशिने नमः** *வசினே நம:*

யாவரையும் தன் வசப்படுத்தும் குணமுள்ளவருக்கு வ - ம்.

829. **वरशीलाय नमः** *வரசீலாய நம:*

மேன்மையான நல்ல ஒழுக்கங்களை யுடையவருக்கு வ - ம்.

830. **वरगुणाय नमः** *வரகுணாய நம:*

நல்ல குணங்களை உடையவருக்கு வ - ம்.

831. **विशोकाय नमः** *விசோகாய நம:*

எவ்வித துக்கமும் இல்லாதவருக்கு வ - ம்.

832. **वज्रधारकाय नमः** *வஜ்ரதாரகாய நம:*

வஜ்ரம் என்று பெயர் உள்ளதும் வஜ்ராயுதத்தைக் காட்டிலும் உயர்ந்ததுமான சக்தி ஆயுதத்தை உடையவருக்கு வ - ம்,

833. **शरजन्मने नमः** *சரஜன்மனே நம:*

கங்காநதியின் கண் சரவணப் பொய்கையில் ஆவிர்பவித்தவருக்கு வ - ம்.

சரம் = நாணல்; சரம் = அம்பு என்றும் பொருள். இதனுல் "சரஜன்மா" என்னும் நாமாவினுல்; சத்துருக்களுடைய அஸ்திர சஸ்த்ரங்களைத் தாங்கும் சக்தி உடையவர் முருகன் என்பது உட்பொருள்.

834. **शक्तिधराय नमः** *சக்திதராய நம:*

பார்வதி பரமசிவனுல் அருளுடன் கொடுக்கப்பட்ட ஒப்பற்ற வல்வமைகொண்ட சக்தி (வேல்) ஆயுதத்தை உடையவருக்கு வ - ம். கந்தபுராணத்திலும் :—

ஆயதன் பின்னர் ஏவில் மூது அண்டத்து
ஐம்பெரும் பூதமும் அடுவது
ஏயபல்லுயிரும் ஒரு தலை முடிய தேவர்மேல் விடுக்கினும்
அவர்தம்மா இருந்திறலும்வரங்களும் சிந்தி மன் உயிர்
உண்பது எப்படைக்கும் நாயகம் ஆவதும் ஒரு தனிச்
சுடர்வேல் நல்கியே மதலை கை கொடுத்தான்.

என்று ஸ்ரீ கச்சியப்ப சிவாசாரியார் அவர்களும் முருகனது வேலை, மிகச் சிறப்பித்துக் கூறுகிருர். ஆகவே தான் தமிழில் முருகனை வேலன் என்று சிறப்பித்துக் கூறுகிருேம்.

835. **शत्रुघ्नाय नमः** *சத்ருக்னுய நம:*

சத்துருக்களை வதம் செய்பவருக்கு வ - ம்.

836. **शिखिवाहनाय नमः** *சிகிவாஹனுய நம:*

மயிலை வாஹனமாகக் கொண்டவருக்கு வ - ம்.

837. **श्रीमते नमः** *ச்ரீமதே நம:*

அஷ்ட லக்ஷ்மிகளையும் உடையவருக்கு வ - ம்.

"मोक्षश्रीः अमृता सतां"

என்றபடி மோக்ஷ ப்ரதமான ஆத்ம ஞானத்தை உடையவர் என்பது உட்பொருள்.

838. **शिष्टाय नमः** *சிஷ்டாய நம:*

நல்லொழுக்கத்துடன் இருப்பவருக்கு வ - ம்.

839. **शुचये नमः** *சுசயே நம:*

வேதநெறிப்படி பரிசுத்தமாய் இருப்பவருக்கு வ - ம்.

840. **शुद्धाय नमः** *சுத்தாய நம:*

களங்கம் இல்லாமல் ஆசாரசீலனாய் இருப்பவருக்கு வ - ம்.

841. **शाश्वताय नमः** *சாச்வதாய நம:*

எப்பொழுதும் அழிவு இல்லாமல் இருப்பவருக்கு வ - ம்.

842. **श्रुतिसागराय नमः** *ச்ருதிஸாகராய நம:*

ஜலங்களுக்கு எப்படி இருப்பிடம் ஸமுத்ரமோ அப்படியே எல்லா வேதங்களுக்கும் இருப்பிடமாய் ஸமுத்ரம்போல் விளங்கு பவருக்கு வ - ம்.

843. **शरण्याय नमः** *சரண்யாய நம:*

யாவராலும் சரணடையத் தகுந்தவருக்கு வ - ம்.

இவ்விதமே ; ராமனையும் "ஸர்வலோக சரண்யாய" என்று விபீஷணமுகமாக வால்மீகி முனிவர் சிறப்பித்துக் கூறுகிறார்.

844. **शुभदाय नमः** *சுபதாய நம:*

யாவருக்கும் மங்களத்தைக் கொடுப்பவருக்கு வ - ம்.

845. **शर्मणे नमः** *சர்மணே நம:*

ஸுகரூபமாய் இருப்பவருக்கு வ - ம்.

846. **शिष्टेष्टाय नमः** *சிஷ்டேஷ்டாய நம:*

நல்லொழுக்கம் உள்ளவர்களுக்கெல்லாம் இஷ்டராய் (ப்ரியனாக) இருப்பவருக்கு வ - ம்.

847. **शुभलक्षणाय नमः** *சுபலக்ஷணாய நம:*

ஸாமுத்ரிகா சாஸ்திரங்களில் சொல்லப்பட்ட நல்ல லக்ஷணங்களையுடைய திருமேனியுடையவருக்கு வ - ம்.

848. **शान्ताय नमः** *சாந்தாய நம:*

அடக்கமாய் ; ஒருவிதவிருப்பு வெருப்பும் இல்லாமல் துக்க மில்லாது ஆனந்த நிலையில் இருப்பவருக்கு வ - ம்.

849. **शूलधराय नमः** *சூலதராய நம:*

சூலாயுதத்தை உடையவருக்கு வ - ம்.

850. **श्रेष्ठाय नमः** *ச்ரேஷ்டாய நம:*

உலகில் உள்ள தேவர்கள் முதலிய யாவருக்கும் மேன்மை யாய் சிறப்புடன் விளங்குபவருக்கு வ - ம்.

851. **शुद्धात्मने नमः** *சுத்தாத்மனே நம:*

மாயாஸம்பந்தம் இல்லாது கேவல ஆத்மஸ்வருபமாய் இருப்பவருக்கு வ - ம்.

852. **शंकराय नमः** *சங்கராய நம:*

யாவருக்கும் க்ஷேமத்தைச் செய்பவருக்கு வ - ம்.

853. **शिवाय नमः** *சிவாய நம:*

மங்களகரமாய் இருப்பவருக்கு வ - ம்.

854. **शितिकंठात्मजाय नमः** *சிதிகண்டாத்மஜாய நம:*

சிவபெருமானின் மகனுக்கு வ - ம். தேவாஸுரர் அம்ருதம் அருந்தவேண்டி திருப்பாற்கடலைக் கடையும்போது முதலில் வாஸுகியினால் உண்டான காலகூடவிஷத்தை உண்டு, கழுத் தில் இருத்தி உலகத்தைக் காத்ததால் நீலகண்டன் (சிதிகண்டன்) என்று பெயர் பெற்றார் சிவபெருமான் என்பது புராண வரலாறு.

855. **शूराय नमः** *சூராய நம:*

அதிக பலம் உள்ளவ்ருக்கு வ - ம். சூரனுக்கும் சூரனாய் இருப்பவர் என்பது உட்பொருள்.

856. **शान्तिदाय नमः** *சாந்திதாய நம:*

கலக்கமற்ற நிம்மதியான தெளிந்த மனோ நிலையைக் கொடுப்பவருக்கு வ - ம்.

857. **शोकनाशनाय नमः** சோகநாசநாய நம:

இஷ்ட வியோகத்தினால் ஏற்படக்கூடிய துக்கத்தை அகற்றுபவருக்கு வ - ம்.

858. **षाण्मातुराय नमः** ஷாண்மாதுராய நம:

கிருத்திகா நக்ஷத்திரங்களாகிய ஆறு தாய்மார்களின் பாலருந்தியமையால் அவர்களைத் தாயாக அமைத்துக்கொண்டவருக்கு வ - ம்.

859. **षण्मुखाय नमः** ஷண்முகாய நம:

ஆறுமுகங்களையுடையவருக்கு வ - ம்.

860 **षड्गुणैश्वर्यसंयुताय नमः** ஷட்குணைச்வர்ய ஸம்யுதாய நம:

ஆறு குணங்களோடும் ஈச்வரத் தன்மையோடும் கூடியவருக்கு வ - ம். (ஸந்தி, விக்ரகம், யானம், ஆஸனம், த்வைதம் ஆச்ரய: என்ற இந்த ஆறு குணங்களையும் ஐச்வர்யமாக உடையவர் மேல் கூறிய ஆறு குணங்களும் அஷ்டைச்வரியங்களும் நிறைந்தவர் என்னும் பொருள்படும்.)

861. **षट्चक्रस्थाय नमः** ஷட்சக்ரஸ்தாய நம:

ஆறுகோணமுள்ள சக்கரத்தில் (யந்த்ரத்தில்) இருப்பவருக்கு வ - ம். (ஆறு ஆவரணமுள்ள சக்கரத்தில் இருப்பவர் என்றும் பொருள்படும்.)

862. **षडूर्मिघ्नाय नमः** ஷடூர்மிக்னாய நம:

கிழத்தன்மை, இறத்தல், பசி, தாகம், சோகம், மோகம் என்று சொல்லக்கூடிய அலைபோல் தோன்றி மறையும் அவஸ்தைகளை நாசம் செய்பவருக்கு வ - ம்.

**जराचमरणं चैव क्षुत्पिपासे तथैव च**
**शोकमोहौच विख्यातौ षडेते ऊर्मयःस्मृताः ॥**
**" क्षुत्पिपासे शोकमोहौ जरामृत्यूषड्मयः "**

863. षडंगश्रुतिपारकाय नमः ஷடங்கச்ருதிபாரகாய நம:

ஆறு அங்கங்களோடு நான்கு வேதங்களையும் கரை கண்டவருக்கு வ - ம்.

शीक्षाव्याकरणंछन्दः निरूक्तंज्योतिषं तथा।
कल्पश्चेतिषडंगानि वेदस्माहुःमनीषिणः॥

சிக்ஷை, வ்யாகரணம், சந்தஸ், நிருக்தம், ஜ்யோதிஷம், கல்பம், இந்த ஆறும் வேதத்தின் அங்கங்கள்.

864. षट्भावरहिताय नमः ஷட்பாவரஹிதாய நம:

ஆறு பாவ விகாரங்கள் இல்லாதவருக்கு வ - ம்.

இருக்கிறது, பிறக்கிறது, வளருகிறது மாறுதல் அடைகிறது, குறைகிறது, நாசமடைகிறது இந்த ஆறும் பாவ விகாரங்கள் எனப்படும்.

865. षट्काय नमः ஷட்காய நம:

ஆறின் ஸமுதாயமாயிருப்பவருக்கு வ - ம். (கிருத்திகைகளுக்காக) ஆறு குழந்தைகளாக இருந்து மீண்டும், ஸ்ரீ பார்வதியின் அணைப்பினால் ஆறுமுகம்கொண்டு ஒருருவமாய் ஆனார் என்பது குறிப்பிடத் தகுந்தது.

866. षट्शास्त्रस्मृतिपारगायनमः ஷட்சாஸ்த்ரஸ்மிருதி பாரகாய நம:

பூர்வமீமாம்ஸா, உத்தரமீமாம்ஸா, ந்யாயம், வைஷிகம், ஸாங்க்யம், யோகம் என்ற இந்த ஆறு சாஸ்திரங்களிலும் தர்ம சாஸ்த்ரங்களிலும் கரைகண்டவருக்கு வ-ம். மனு வ்யாசர், விஷ்ணு, யமன் முதலிய மகான்களால் சொல்லப்பட்ட வேத ஸாரம், ஸ்மிருதி என்றும் தர்ம சாஸ்த்ரம் என்றும் சொல்லப்படும்.

867. षड्वर्गदात्रे नमः ஷட்வர்கதாத்ரே நம:

சமம், தமம், உபரதி, பொறுமை, ஸமாதானம் ச்ரத்தை என்ற இந்த ஆறு உத்தம குணங்களையும் அளிப்பவருக்கு வ - ம்.

868. षड्ग्रीवाय नमः ஷட்க்ரீவாய நம:

(ஆறுமுகம் இருப்பதால்) ஆறு கழுத்துடையவருக்கு வ - ம்.

869. **षडरिघ्नाय नमः** *ஷடரிக்னுய நம:*

காமம், கோபம், மோஹம், லோபம், மதம், மாத்ஸர்யம் என்ற மனிதனுடைய சத்ருக்களை அழிப்பவருக்கு வ - ம்.

870. **षडाश्रयायनमः** *ஷடாச்ரயாய நம:*

குமாரதந்த்ரம் கூறும் ஐகத்பூ: முதலிய 6 மகாமந்த்ரங் களுக்கு ஆச்ரயமாய் இருப்பவருக்கு வ - ம்.

871. **षड्किरीटधरायश्रीमते नमः** *ஷட்கிரீடதராய ஸ்ரீமதே நம:*

ஆறு கிரீடங்களை அணிந்துகொண்டிருக்கும் ச்ரீமானுகிய முருகனுக்கு வ - ம்.

872. **षडाधाराय नमः** *ஷடாதாராய நம:*

மூலாதாரம், ஸ்வாதிஷ்டானம், மணிபூரகம், அனுஹதம் விசுத்தி ஆஞ்ஞாசக்ரம் என்ற 6 இடங்களிலும் இருப்பவருக்கு வ - ம்.

873. **षड्क्रमाय नमः** *ஷட்க்ரமாய நம:*

ஆறு மலைகளிலும், சஞ்சரிப்பவருக்கு வ - ம்.

திருப்பரங்குன்றம், திருச்சீரலைவாய், ஸ்வாமிமலை, பழமுதிர் சோலை, பழனி, குன்றுதோராடல்; இப்பர்வதங்களில் முருகன் நித்யவாசம் செய்கிருர் என்று புராணங்கள் கூறுகின்றன.

874. **षट्कोणमध्यनिलयाय नमः** *ஷட்கோணமத்ய நிலயாய நம:*

ஆறுகோணம் அமைந்த யந்த்ரத்தில் இருப்பவருக்கு வ - ம்.

875. **षंडत्वपरिहारकाय नमः** *ஷண்டத்வபரிஹாரகாய நம:*

நபும்ஸகத்தன்மையை நீக்கி ஆண்மையை அளிப்பவருக்கு வ - ம்.

876. **सेनान्ये नमः** *ஸேநான்யே நம:*

தேவஸேனையின் தலைவனுக்கு வ - ம்.

